கணவன் : "தா புள்ளே! மருவாதியா கலைஞர் சொல்றபடி 'கை' சின்னத்துக்கு வோட்டுப் போட்டுருவோம்."

மனைவி : "அதாங்க நடக்காது! எம். ஜி. ஆர். சொல்றதைத்தான் கேப்போம்!... 'கை' சின்னத்துக்குத் தான் வோட்டுப் போடுவோம்!

# கல்கி

KALKI 29-11-81 ரூ. 1.20



# சோ

**வி**வேகா ஃபைன் ஆர்ட்ஸுக்கு வெள்ளி விழா.

கல்கியில் ''பரதன்'' எழுதிய ''தேன்மொழியாள்'' என்ற நாவலை இருபத்தைந்து ஆண்டுகளுக்கு முன் முதன் முதலாக நாடகமாக்கி அரங்கேற்றியது விவேகா ஃபைன் ஆர்ட்ஸ். ''சாமா'' சில கார்ட்டூன் சித்திரங்கள் வரைய விமர்சனம் கல்கியில் இடம் பெற்றது. பிறகு சில நகைச்சுவைத் தொடர் கதைகள்; தொடர் நாடகங்கள் எழுதவும் சோவுக்குக் கல்கி வாய்ப்பளித்தது. தமது எழுத்தை முதன் முதலில் பிரசுரித்ததுடன் தமது நாடகங்களுக்கு முதன் முதலில் ஊக்கமளித்தது கல்கிதான் என்ற அளவில் சோவுக்கு எப்போதுமே இப்பத்திரிகை மீது அன்பும் பாசமும் உண்டு.

முதலில் கல்கி பத்திரிகை அவர் வளர உதவினாலும், பின்னால் நன்கு வளர்ந்து விட்ட அவரது சேவையையும் கல்கி பயன்படுத்திக் கொண்டிருக்கிறது.

சுதந்திரத்துக்கு முன்னால் நாடக மேடையும் சினிமாவும் சமுதாயப் பிரக்ஞை பெற்றிருந்தன. சுதந்திரம் பெற்ற பின்னரோ ஏதோ கதைகளை நாடகமாக்குவது அல்லது சில ஹாஸ்யத் துணுக்குகளைத் தொகுத்து நகைச் சுவை நாடகம் என்ற பெயரில் தருவது என்ற பழக்கம் இருந்தது. இந்நிலையில், நாடக மேடையில் அரசியல் – சமுதாய விமர்சனத்தைப் புகுத்தி, மற்றவர்களுக்கு முன்னோடியாய் விளங்கி, தைரியத்தை ஊட்டியவர் சோ. 'விமர்சனத்தை நகைச்சுவைப் போர்வையில் அளிக்கும்போது விமர்சிக்கப்படுகிறவரை அது அவ்வளவாகப் பாதிக்காது' என்று சிலர் சொல்வார்கள். இது சரியேயல்ல. அங்கதபாணிக் குத்தல் இன்னும் ஆழவே தைக்கும். என்றாலும், 'சொல்ல வேண்டியதைச் சொல்லியே தீருவேன்' என்று அச்சம் தவிர்த்துச் செயல்பட்டார் சோ. அவரது பல நாடகங்கள் அபாரமான வெற்றி பெற்றன. 'என்ன பிரயோசனம்? இந்நாடகங்கள் என்ன சாதித்துவிட்டன?' என்று கேட்கக் கூடாது. 'இத்தகைய நாடகங்கள் கூட இல்லையெனில் நமது நிலை இன்னும் எவ்வளவு பரிதாபத்துக்குரியதாய் இருக்கும்' என்று எண்ணிப் பார்த்தால் சோவுடைய நாடகங்களின் முக்கியத்துவம் புரியவரும்.

விவேகா ஃபைன் ஆர்ட்ஸின் பல நடிகர்கள் ஆரம்பத்திலேயே அவருடன் சேர்ந்து இன்றளவும் ஒத்துழைத்துவருகிறார்கள். (நீலு அம்பி முதலியவர்கள்) அவரது நாடகக் குழுவிலிருந்தும் பத்திரிகையிலிருந்தும் பிரிந்து சென்றுபிரகாசித்தவர்களும்உண்டு. (அனந்த், காத்தாடி ராமமூர்த்தி போன்றவர்கள்).

வெள்ளி விழாவின்போது புதிய நாடகம் அரங்கேற்றுகிறார் சோ. என்ன கதை? ''கதையாவது கத்தரிக்காயாவது? முழுக்க முழுக்க விமர்சனம்தான்'' என்கிறார். போலீஸ் இந்நாடகத்துக்கு ஆட்சேபணை எழுப்பாது அனுமதித்துவிட்டதைப்பாராட்டுகிறார் சோ. கூடவே, ''நாடகங்களை சென்ஸார் செய்யப் போலீஸுக்கு அதிகாரம்



அளிப்பது தவறு' என சுப்ரீம் கோர்ட்டில் ஒரு வழக்கு இருப்பதையும் நினைவு கூர்கிறார்.

சென்னை சபாக்கள் பல ஒன்று சேர்ந்து டிசம்பர் முதல் — இரண்டாவது வாரத்தில் சோவின் நாடக விழா ஒன்று நடத்தி அவரைப் பாராட்டுகின்றன; தமது நாடகக் குழுவின் வளர்ச்சிக்கு உதவிய பலரை சோ பாராட்டுகிறார்.

வழக்கறிஞரான சோ அந்தத் துறையில் மட்டுமின்றி, சினிமா, நாடக மேடை, பத்திரிகைத் துறை போன்ற அனைத்திலும் பெரும் புகழ் பெற்றிருக்கிறார். அரசியலில் புகவேண்டும் என்ற ஆர்வம் உள்ளவர்தான். ஆனால் இந்நாட்டில் உள்ள அறிஞர்கள் பலர் அரசியலில் புகத் தயங்குவது போல அவரும் தயங்குகிறார்.

அரசியலை மட்டுமே தொழிலாகக் கொள்ளாத அறிஞர்களையும் திறமையாளர்களையும் வேட்பாளர்களாக வரவேற்கும் பண்பு நமது கட்சிகளிடமும் வாக்காளர்களிடமும் பெருகும்போதுதான் நமது ஜனநாயகமும் சிறக்கும்.

அந்தக் காலம் விரைவில் வரவேண்டும் என்று இறைவனைப் பிரார்த்தித்துக்கொண்டு சோவுக்கு மேன் மேலும் பல வெற்றிகள் குவியக் கல்கி நேயர்கள் சார்பில் வாழ்த்துகிறோம்.

# கடுகு பதில்கள்




✻ எஸ். ராஜி, ஞானமூர்த்திநகர்

கே. விக்கல் ஏற்பட்டால் அதைச் சீக்கிரமாக நிறுத்த வழி என்ன?

ப: விக்கல் வரும்போது மூக்கில் துணியைப் போட்டுத் தும்மலை வரவழைத்துக்கொள்ளுங்கள். விக்கல் நின்றுவிடும்.

✻ என். சக்திவேல், ஈரோடு

கே. வளர்த்த கடா மார்பில் பாய்வது ஏன்?

ப: வளர்த்தவர் அதற்குத் தொல்லை தந்திருப்பார். இத்தனை நாளாக மார்பில் பாயாத மாடு இப்போது பாய்வதேன் என்று சிந்தித்துப் பார்க்க வேண்டாமா? தன்னையே உயர்த்திப் பேசும் நபருக்கு மற்ற யாவரும் — மிருகங்கள் உள்பட — நன்றிகெட்டவர்கள் என்று நினைப்பு.

✻ ஆர். அலிகோபி, குடியாத்தம்

கே. அழகாக இருப்பவர்கள் கர்வப்படலாமா?

ப; நான் கர்வப்படுவதற்கு அதுமட்டுமல்ல காரணம்!

✻ வி. ராதாகிருஷ்ணன், சென்னை-15

கே. வாழ்க்கையில் 'தோல்வி' என்பது முடிவா அல்லது அனுபவமா?

ப: அனுபவம் என்றெடுத்துக் கொண்டு மனத் தளர்ச்சி அடையாதவர்கள் வெற்றியடைய வாய்ப்புண்டு. 'போச்சு. இத்தோடு முடிஞ்சு போச்சு' என்று கைவிட்டவர்களுக்குத் தோல்விஎன்பது முடிவு தான். இது முடிவில்லை என்கிற முடிவு எடுத்துச் செயல்பட எத்தனை பேரால் முடியும் என்பது வேறு கேள்வி.




✻ குமாரி வி. ரங்கம், ஸ்ரீவைகுண்டம்

கே. நேற்றுவரை 65 ரூபாய் வாடகையாக இருந்த வீடு காலியானதும் இன்று கேட்டால் 120 ரூபாய் வாடகை வேண்டும் என்கிறாரே?

ப: அம்மா குழந்தை, பூலோகத்தில் இப்படித்தான் நடக்கிறது. (ஸ்ரீவைகுண்டத்தில் மகாவிஷ்ணு பரிபாலனம் பண்ணுவதால் அங்கு பிரச்னை இல்லை) எல்லாப் பொருட்களும் விலை ஏறிக் கொண்டிருக்கும் போது வாடகை ஏறுவது இயற்கை தானே. அநியாயமாய் ஏற்றுவதைத்தான் கண்டிக்க வேண்டும்.

✻ பால. கோவிந்தராஜ், புரசைவாக்கம்

கே. நான் உண்டு, தன் வேலை உண்டு என்று இருப்பது தவறு என்ன?

ப: 'தன் வேலை' என்ன என்பது முக்கியம். மற்றவர்களுக்குத் தொல்லை கொடுப்பது கூடத் தன் வேலையாகப் பலர் வைத்திருக்கிறார்கள். மற்றவர்களுக்கு உதவி செய்யாமல் இருப்பது, சுயநலமாக இருப்பது, இவைகளைத் தன்வேலையாக எண்ணுபவர்களும் இருக்கிறார்கள். மனிதன் ஒரு தீவு அல்ல. தனித்து ஒதுங்கக் கூடாது. அனைவரின் சுக, துக்கங்களில் பங்கு கொள்ள வேண்டும்.

பரிசு பெறுபவர்:

வி. ராதாகிருஷ்ணன்
9, ஆதிகேசவன் தெரு, சுப்ரமணிய சாலை
சென்னை-600 015

# முடி வளர்க்கும் மூலிகை மருந்துகளை உங்களுக்காகவே உருவாக்கி இருக்கிறோம்!







## பண்டைய சித்தர்கள் ஆராய்ந்து பயன்படுத்திய முடிவளர்க்கும் மூலிகை மருந்துகளை இப்பொழுது நீங்களும் பயன்படுத்தலாம்!

பழமையின் மெய்ஞான வலிவும்
புதுமையின் விஞ்ஞானப் பொலிவும்
ஒன்றாக இணைந்து உருவாகியுள்ள
நன்மை பயக்கும் ஆராய்ச்சி மருந்துகள்!

- முடி உதிர்தல் நின்று, கருகரு என்று மயிர் வளரும்!
- இளநரை மாறும்! புழுவெட்டில் மயிர் முளைக்கும்!
- பொடுகு, பேன், ஈறுகள் அடியோடு மறையும்!
- குளுமையும், புத்துணர்ச்சியும் உண்டாகும்!
- ஞாபக சக்தி வளரும்! நன்கு தூக்கம் வரும்!

கிரௌன் முடிவளர்க்கும் மூலிகை மருந்துகள்—
உங்கள் கேசத்தைப் பாதுகாக்கும்
இயற்கை கிலேசரணிகள்!

### கிரௌன் ஹெர்பல் ஹேர் க்ரீம்
(HERBAL HAIR CREAM)

முற்றிலும் மூலிகைச் சத்துகள் அடங்கிய இனிய நறுமணமும் குளுமையும் இணைந்த முடிவளர்க்கும் மூலிகை ஹேர் க்ரீம்

### கிரௌன் ஹெர்பல் ஹேர் டானிக்
(HERBAL HAIR TONIC)

பரிசுத்தமான தேங்காய் எண்ணெயில் பரிமளமும் குளுமையும் பரவி நின்று கார்முகில்போல முடிவளர்க்கும் கூந்தல் தைலம்

### கிரௌன் ஹெர்பல் ஹேர் கேர்
(HERBAL HAIR CARE)

குன்றாத நுரைவளமும், நறுமணமும், ஒன்றாக விரவி நின்று நன்றாக முடிவளர்க்கும் முதன்மையான மூலிகை ஷாம்பு

தயாரிப்பாளர்கள்:
**கிரௌன் ஹெர்பல் ப்ராடக்ட்ஸ்**
(CROWN HERBAL PRODUCTS)
55, ஹாரிஸ் சாலை, புதுப்பேட்டை,
சென்னை-600 002
(எழும்பூர் மாஜிஸ்ட்ரேட் கோர்ட்டுக்கு எதிரில்)




Siddhar

**சென்னை மற்றும் கோவை நகரங்களில் எல்லா மருந்து கடைகள் மற்றும் பேன்ஸி ஸ்டோர்களிலும் கிடைக்கும்**



⌘ கம்யூனிஸ்ட் பிரமுகர் கூத்தக்குடி சண்முகம்

# திருப்பத்தூரில்

திருப்பத்தூரில் திருப்பம் வரும் என்று எம். ஜி. ஆர். அறிவித்ததிலிருந்து திருப்பத்தூர் இடைத் தேர்தலுக்கு ஒரு முக்கியத்துவம் வந்து விட்டது. திருப்பத்தூர் தொகுதியில் மூன்று நாட்கள் சுற்றுப் பயணம் செய்த போது பத்திரிகைகளில் இருந்த பரபரப்பு மக்களிடம் இல்லை என்பதை உணர்ந்தபோது 'மக்கள் தேர்தலை விரும்பவில்லையோ?' என்ற சந்தேகம் எழுந்தது.

இத்தொகுதியில் திருப்பத்தூர், சிங்கம்புணரி ஆகிய இரண்டு ஊர்கள் தான் நகரப் பகுதிகள். 90 பஞ்சாயத்துக்களில் இருநூறுக்கும் மேற்பட்ட கிராமங்கள் இருக்கின்றன. ஒரு லட்சத்துப் பதினாறாயிரம் வாக்காளர்கள் கொண்ட இந்தத் தொகுதியில் பாதிக்கும் மேற்பட்டவர்கள் பெண் வாக்காளர்கள். வானம் பார்த்த பூமி தான். கடந்த நான்கு ஆண்டுகளாக மழை சரியாகப் பெய்யாததால் வறட்சி. ஆனால் இந்த வருடம் நல்ல மழைபெய்து பெரிய கண்மாய்கள் நிறைந்து இருக்கின்றன. எங்கு நோக்கினும் பசுமை. மக்கள் தேர்தல் பரபரப்பில் இல்லாமல், நடவு வேலைகளைக் கவனித்துக்கொண்டிருந்தார்கள்.

இடைத் தேர்தலில் களத்தில் நிற்பவர்கள் 13 வேட்பாளர்கள். ஆனால் முக்கியமானவர்கள் மூன்று பேர்தான். இ. காங்கிரஸ் இராம. அருணகிரி, இந்திய கம்யூனிஸ்ட் வீர சண்முகம், ஜனதா திருமால் யாதவ். மூவருமே எளிமையானவர்கள் என்று பொது மக்கள் கூறுகின்றனர்.

இ. காங்கிரஸ் இராம அருணகிரி முக்குலத்தோர் இனத்தைச் சேர்ந்தவர். சிங்கம் புணரி பஞ்சாயத்து யூனியன் தலைவராகப் பத்து வருடங்கள் பணியாற்றியவர். சிங்கம் புணரி ஊராட்சி ஒன்றியத்தைச் சேர்ந்த பகுதிகளில் இவர் கணிசமான அளவு வாக்குகளைப் பெறலாம் என்று கூறப்படுகிறது. ஆனால் திருப்பத்தூர் ஊராட்சி ஒன்றியத்தைச் சேர்ந்தவர்கள் இந்த முறை திருப்பத்தூரைச் சேர்ந்த ஒருவர்தான் சட்டமன்ற உறுப்பினராக வரவேண்டும் என்று விரும்புகிறார்கள். இதற்குக் காரணம்: மாதவன் இந்தத் தொகுதி உறுப்பினராக இருந்த போது சிங்கம்புணரிக்குத் தான் நிறைய வசதிகள் செய்து கொடுத்தார் என்றும் திருப்பத்தூரைப் புறக்கணித்தார் என்றும் உள்ள குற்றச்சாட்டுத்தான்.

''கை'ச் சின்னத்திற்குத் தான் வாக்களிப்பார்கள்'' என்கிறார் எம். பி. சுப்பிரமணியம்





⌘ 'நான் மேடையிடம் பேசுகிறேன்' - மத்திய விவசாயத் துறை இணை அமைச்சர் ஆர். வி. சுவாமிநாதன்.

அருணகிரிக்கு வேலை செய்ய நிறைய மந்திரிகள் விஜயம் செய்யப் போகிறார்கள். தி.மு.க.—அ.தி.மு.க. ஆதரவு இ.காங்கிரஸுக்குத்தான் என்று அதன் தலைவர்கள் அறிவித்த போதும், தொண்டர்களின் மனநிலை வேறு விதமாக இருக்கிறது. தலைவர்கள் தங்களது வசதிக்காகச் சந்தர்ப்பவாத அரசியலில் ஈடுபடுகிறார்கள் என்றும் அதை ஏற்க முடியாது என்றும் தொண்டர்கள் வெளிப் படையாகவே கூறுகிறார்கள். அ.தி.மு.க.வுக்கும், தி.மு.க.வுக்கும் கிட்டத்தட்ட 35 ஆயிரம் வோட்டுக்கள் இருக்கின்றன. அவை அனைத்துமே இந்திரா காங்கிரஸ்வேட்பாளருக்குத் தான் விழும் என்று நிச்சயமாகக் கூற முடியாது. ''எங்கள் மேடைகளிலும், கார்களிலும் அவர்களை ஏற்ற மாட்டோம்'' என்று எம். பி. சுப்பிரமணியம் அறிவித்ததிலிருந்து மிகவும் மனம் நொந்து போயிருக்கிறார்கள் இந்த இரண்டு கட்சித் தொண்டர்க



⌘ ஓட்டு வேட்டை ஆடும் கம்யூனிஸ்ட் வேட்பாளர் இருவீர சண்முகம்



⌘ கள்ளுக் கடையிலும் தேர்தல் பிரசாரம்



⌘ ஜனதா வேட்பாளர் திரு மால் யாதவ்

# திருப்பங்கள்!

ளும். ஆனால் அருணகிரிக்கு ஆதரவாக வேலை செய்யத் தமிழ் நாட்டின் பல பகுதி களிலிருந்து கார்கள், ஜீப்புகள் வந்துள்ளன. ஒவ்வொரு கிராமத்திலும் இந்திரா படம் போட்டுத் துணி பேனர்கள் தொங்க விடப் பட்டுள்ளன. இ. காங்கிரஸ் வேட்பாளருக்கு வேலை செய்ய மூன்று இடங்களில் தாங்க ளாகவே அலுவலகம் திறந்திருக்கிறார்கள் அ. தி. மு. க.வினர். முசிறிப் புத்தன் தொகுதியில் முகாமிட்டிருக்கிறார். கடைசிக் கட்டத்தில் அ. தி. மு. க.வினர் முழு மூச் சாக இறங்கி வேலை செய்வார்கள் என்று தோன்றுகிறது. ஆனால் தி.மு.க.தொண்டர்கள்கொதித்த மனத்துடன் அமைதியாக இருக் கிறார்கள். சிங்கம்புணரி ஒன்றிய தி.மு.க. செயலாளர் கரு. கணே சனைச் சந்தித்த போது அவர் கூறியது:

''எங்கள் கலைஞர் சொன்னது போல், எங்கள் கட்டுத் தொடர் கிறது. தனிப்பட்ட முறையில் அருணகிரி நல்ல மனிதர். ஆனால் கட்சித் தலைமை காங்கிரஸ் வேட் பாளருக்குத் தான் வோட்டுப் போட வேண்டும் என்று இன்னும் கட்டளையிடவில்லை. கிராமங்களி லிருந்து வரும் தி.மு.க. தொண் டர்கள் 'என்ன செய்வது' என்று கேட்கிறார்கள். 'பொறுங்கள் தலை மையிடமிருந்து அறிக்கை வரும்' என்று சொல்லி யிருக்கிறேன். கடைசி வரை ஒரு அறிக்கையும் வராவிட்டால் ஓட்டுக்கள் மனச் சாட்சிப்படிதான் விழும்.''

ஆதரவு தருகிறேன் - என்று வரும் தி.மு.க. வையும் அ.தி.மு. க.வையும் மேடையில் ஏற்றினால் என்ன என்று தொகுதியில் முகா மிட்டிருக்கும் மத்தியவிவசாயத் துறை இணை அமைச்சர் ஆர்.வி. சாமிநாதனைக் கேட்டபோது, ''அவர்களுக்குள் அனாவசியமாகச் சண்டை போட்டுக்கொள்ளு வார்கள்'' என்று கூறினார். ''மேடையில் பேசும்போது ''காங்கிரசை ஆதரிக்க வேண்டும் என்று மட்டும் பேசச் சொல்லுங் களேன்'' என்று கேட்டபோது, ''நான் 20ம் தேதி டெல்லிக்குப் போகிறேன். இது பற்றி மேடமிடம் பேசுகிறேன்'' என்றார். இவரிடம் பேசும் போது எளிதில் காங்கிரஸ் வெற்றி பெறும் என்ற நம்பிக்கையை அதிக மாக பார்க்க முடிந்தது. வேட்பாளர் அருண கிரி கிட்டத்தட்ட பாதிக் கிராமங்களுக்குச் சென்று வந்துவிட்டார். தலைவர்கள் அதிக மாக வந்து செல்லுவதால் இவரது 'வோட்டு' கேட்கும்பணி, திட்ட மிட்ட வகத்தில் முன்னேற வில்லை.

⌘ கம்யூனிஸ்ட் கட்சி பிரமுகர் நல்லகண்ணு





⌘ சிங்கம் புணரி ஊராட்சி ஒன்றிய தி. மு. க. செயலா லர் கரு. கணேசன்

வலது கம்யூனிஸ்ட் . வேட் பாளர் காரையூர் வீர சண்முகம் ஒரு சிறு விவசாயி. இவரும் மூக் குலத்தோர் பிரிவைச் சேர்ந்தவர் தான். திருப்பத்தூரில் உள்ள கம்யூனிஸ்ட் கட்சி அலுவலகத்தில் இவரைச் சந்தித்தபோது தரை யில் அமர்ந்து அவசரம் அவசர மாகக் காலை டிபனைச் சாப்பிட்டுக் கொண்டிருந்தார். அங்கிருந்த வர்கள் யாரும் அவரைக் கண்டு கொண்டதாகவே காட்டிக் கொள்ளவில்லை. இவருக்காக வேலை செய்ய மாநிலம் முழு வதிலுமிருந்து தொண்டர்கள் வர இருப்பதாகவும், பொருளாதார நிலை மிக மோசமாக இருப்பதாக வும் தொகுதியில் முகாமிட்டு வேலை செய்யும் கம்யூனிஸ்ட் கட் சிப் பிரமுகர்களான நல்லகண்ணு வும், கூத்தகுடி சண்முகமும் கூறி னார்கள். இந்தத் தொகுதியில் பல கிராமங்களில் விவசாயிகளிடம் கம்யூனிஸ்ட் கட்சிக்கு நல்ல செல்

ஆளும் கட்சியும், எதிர்கட்சியும் வேட்பாளர் நிறுத்தாத

திருமால் யாதவ் A.V.L

⌘ ஜனதா வேட்பாளருக்கு ஆதரவாக எழுதப்பட்டுள்ள வாசகங்கள்



இ.காங்கிரஸ் வேட்பாளர் இராம அருணகிரி

வாக்கு இருக்கிறது. மேலும், சோதிப் படைந்து போயிருக்கும் தி.மு.க. — அ. தி. மு. க. தொண்டர்களின் வோட்டுக்களில் பாதி கம்யூனிஸ்ட் கட்சி வேட்பாளருக்குக் கிடைக்கும் என்று கூறுகிறார்கள் கம்யூனிஸ்ட் தலைவர்கள். பின்தங்கிய வகுப்பினரான வலையர்களின் 8000 ஓட்டுக்கள் கம்யூனிஸ்ட் கட்சிக்குக் கிடைக்கும் என்று எதிர்பார்க்கிறார்கள். இதிலும் ஒரு சிக்கல் இருக்கிறது. வலையர்களின் பிரிவைச் சேர்ந்த சாமியப்பன் என்பவர் இந்தத் தொகுதியில் மீன் சின்னத்தில் சுயேச்சையாகப் போட்டியிடுகிறார். அதனால் பெரும் பகுதி வோட்டுக்கள் பிரிந்துவிடும் என்றும் எதிர்பார்க்கப்படுகிறது.

வ. கம்யூனிஸ்ட் கட்சி வேட்பாளருடன் நாகமங்கலம், பிரான்பட்டி, கணபதிபட்டி, புழுதிப்பட்டி, மணப்பட்டி, குன்னத்தூர் ஆகிய கிராமங்களுக்குச் சென்றபோது, இவருக்குள்ள ஆதரவைப் புரிந்து கொள்ள முடிந்தது. அதிமுக — திமுகவைச் சேர்ந்த உள்ளூர்த் தலைவர்கள் வேட்பாளரிடம் ''உங்களுக்குத்தான் எங்கள் வோட்டு'' என்று கூறுவதையும் கேட்க முடிந்தது. இந்தத் தேர்தலில் தலைவர்கள் எடுத்த சந்தர்ப்பவாத முடிவுகளை கிராமமக்கள் தெளிவாக எடுத்துக் கூறியதைக் கேட்டபோது, நமது கிராம மக்களுக்கு அரசியல் விழிப்புணர்ச்சி வந்துவிட்டதோ என்ற எண்ணம் ஏற்பட்டது. குழம்பிய குட்டையில் மீன் பிடிப்பதைப் போல், கழகத் தொண்டர்களின் மத்தியில் நிலவும் குழப்பங்களைக் கம்யூனிஸ்ட் கட்சியினர் தங்களுக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொள்வதைப் பார்க்க முடிந்தது. கிட்டத்தட்ட 30 ஆயிரம் வாக்குகள் கம்யூனிஸ்ட் கட்சி பெறலாம் என்று அவர்கள் கூறினாலும், 20 ஆயிரம் வோட்டுக்களே பெறுவார்கள் என்று மாற்றுக் கட்சியினர் கூறுகிறார்கள். கம்யூனிஸ்ட் கட்சியை ஆதரிக்கும் குமரி அனந்தன், நெடுமாறன் போன்றவர்கள் பிரசாரத்தில் முழு மூச்சாக ஈடுபடும்போது ஆதரவு கூடும்.

அடுத்தது ஜனதாவைச் சேர்ந்த வேட்பாளர் யாதவ். இவர் பெரிதும் நம்பியிருப்பது 24000 ஓட்டுக்களைக் கைவசம் வைத்திருக்கும் கோனார் ஜாதியைத் தான். மேலும் கம்யூனிஸ்ட் கட்சியைப் பிடிக்காத தி. மு. க. அ.தி.மு.க. தொண்டர்களின்



அதிமுக தொண்டர் பாலு

வோட்டுக்கள் அவருக்குத்தான் விழும் என்று கூறுகிறார்கள்.

கண்ணதாசன் பிறந்த ஊரான சிறுகூடல் பட்டியில் ஜனதா வேட்பாளர் திருமால் யாதவை ஆதரிக்கும் வகையிலும் கழகத் தொண்டர்களின் மனக் கசப்பை வெளிப் படுத்தும் வகையிலும் பல வாசகங்கள் சுவர்களில் எழுதப்பட்டு இருக்கின்றன. சிறுகூடல் பட்டியில், கழகத் தொண்டர்கள் ஜனதாக் கொடியை ஏற்றி, திருமால் யாதவை ஆதரிக்கும் பேனர்களை வைத்ததை நேரிடையாகவே கண்டோம். கீழச்சேவல்பட்டி, விருசுவதி போன்ற கிராமங்களில் கழகத் தொண்டர்கள் ''உங்களுக்குத்தான் எங்கள் வோட்டு'' என்று ஜனதா வேட்பாளரிடம் கூறினார்கள். கோனார்களின் எல்லா வோட்டுக்களுமே ஜனதா வேட்பாளருக்குத்தான் விழும் என்று கூற முடியாது. வசதி படைத்த பல கோனார்கள் காங்கிரஸ் கட்சியை ஆதரிக்கிறார்கள். கழகத் தொண்டர்களின் மனக் கசப்பை எவ்வளவு தூரம் ஜனதா பயன் படுத்திக் கொள்ளப் போகிறது என்பது, சோ, சுப்பிரமணிய சுவாமி, மது தண்டவாதே போன்றவர்கள் பிரசாரத்துக்கு வந்தவுடன் தெரியும். ஜனதா கட்சியினரும் பொருளாதாரப் பிரச்னையில் மாட்டிக் கொண்டிருக்கிறார்கள். கோவை மாவட்ட கட்சியின் பிரிவு தான் செலவுகளை ஏற்றுக் கொண்டிருக்கிறது என்று கூறினார் கோவையைச் சேர்ந்த ஜனதாக் கட்சித் தலைவரான பாலு.



கம்யூனிஸ்ட் வேட்பாளர் வீர சண்முகம்

இந்தத் தொகுதியைப் பொறுத்தவரை ஜாதி உணர்வை அடிப்படையாக வைத்து யாரும் வெற்றி பெற்றதில்லை. மூன்று முறை வெற்றி பெற்ற மாதவன் இந்தத் தொகுதியில் மைனாரிட்டி வகுப்பான பிள்ளை வகுப்பைச் சேர்ந்தவர். 1980 தேர்தலில் வெற்றி பெற்ற வால்மீகியும் தொகுதியின்மைனாரிட்டி பிரிவான கவுண்டர் பிரிவைச் சேர்ந்தவர் தான். தொகுதியில் 5000த்திலிருந்து 8000 வரை முஸ்லிம் ஓட்டுக்கள் இருக்கின்றன. தமிழ்நாடு ஜனதா கட்சியின் தலைவர் முகமது இஸ்மாயில், முஸ்லிம் வோட்டுக்கள் உள்ள பகுதியில் சுற்றுப் பயணம் மேற்கொண்டு அந்தப் பிரிவினரின் வோட்டுக்களைப் பெற முயல்வார் என்று ஜனதாக் கட்சியினர் கூறுகின்றனர்.

இந்த மாதம் 16ந் தேதியன்று இருந்த நிலைமையைப் பார்க்கையில் தி.மு.க.—அ.தி மு.க. ஆதரவு வோட்டுக்கள், கம்யூனிஸ்ட், ஜனதா கட்சிகளுக்குத்தான் விழும் என்று புரிந்துகொள்ள முடிந்தது. ஒருவேளை கருணாநிதி முறையாகப் பிரசாரத்துக்கு அழைக்கப்பட்டு வந்தால் கட்டுக்கோப்பாக தி.மு.க ஆதரவு வோட்டுக்கள் காங்கிரஸ் கட்சிக்கு

# ஒரு முறை ராம்கோ
# என்றென்றும் ராம்கோ!







ஒரு தடவை பொருத்தப்பட்ட ராம்கோ உங்களுக்கு எந்த சீதோஷ்ண நிலையிலும் பாதுகாப்பளித்து என்றும் உறுதியாக நீடித்து உழைக்கும், எங்கள் வாடிக்கையாளர்களைக் கேளுங்கள். ராம்கோவை ஒரு முறை தேர்ந்தெடுத்தவர்கள் வேறு எதையும் நாடமாட்டார்கள் — ராம்கோவைத் தவிர.

ஏனெனில், ராம்கோ ஒரு சாதாரண அஸ்பெஸ்டாஸ் சிமெண்ட் ஷீட் மட்டுமல்ல—இது உங்களுக்கு ஒரு நிரந்தர பாதுகாப்பளிக்கும் சாதனம். மேலும் இதற்குப் பராமரிப்பே தேவையில்லை. காலாக தரம் சிறிதும் குறையாத ராம்கோவைப் போற்றுவோர் ஏராளம்.

முழுவதும் தானே இயங்கும் நவீன தொழிற்சாலைகளில் தயாராகும் ராம்கோ அஸ்பெஸ்டாஸ் சிமெண்ட் ஷீட்டுகள் அதிக உறுதிக்கும், நீடித்த உழைப்பிற்கும், உஷ்ணம் மற்றும் துருப்பிடித்தலை தடுப்பதிலும் சிறந்தது. எனவே ராம்கோ எங்கும் பிரபலமாக விளங்குவதில் ஆச்சரியமில்லை.

**Ramco** அஸ்பெஸ்டாஸ் சிமெண்ட்
ஷீட்டுகள் மற்றும் உபகரணங்கள்

தயாரிப்பாளர்கள்:



**ஸதர்ன் அஸ்பெஸ்டாஸ் சிமெண்ட் லிட்**
739 அண்ணாசாலை, சென்னை-600 002
கிளைகள்: பெங்களூர்-கொச்சி-விஜயவாடா-ஹைதராபாத்-பூனா
தொழிற்சாலை: அர்க்கோணம் (தமிழ்நாடு) கரூர் (கர்நாடகம்)
பூரண விற்பனை ஏஜெண்டுகள்: ராஜா தர்ம ஸ்தாபனம்.

ACIL SAC 4 TM A78

விழலாம். ஆனால் அ. தி. மு. க. தொண்டர்களோ ''எம்.ஜி.ஆர். வந்தால் கூட எங்கள் மனம் மாறாது, எங்கள் வோட்டுக்கள் நிச்சயம் கைச் சின்னத்துக்கு அல்ல'' என்று கூறுகிறார்கள்.

கம்யூனிஸ்ட் கட்சிக்கு வேலை செய்யும் அ. தி. மு. க. தொண்டர் பாலு மனம் கொதித்துப் பேசினார்: ''தொண்டர்களின் மனம் அறிந்து செயல்படுவது தான் தலைவர்களின் கடமை. தலைவனுக்காகத் தொண்டன் இல்லை, தொண்டனுக்காகத்தான் தலைவன். ரே கமிஷன், சர்க்காரியா கமிஷன் போன்றவை தி.மு.க.–அ.தி.மு.க. தலைவர்களைப் பயமுறுத்தலாமே தவிர, தொண்டர்களை அவை ஒன்றும் செய்ய முடியாது. என்னைக் கட்சியை விட்டு நீக்கினாலும் பரவாயில்லை, 29ம் தேதி வரை (வோட்டுப் பதிவு நாள்) எங்கள் தலைவரின் பேச்சைக் கேட்கப் போவதில்லை!'' கம்யூனிஸ்ட் கட்சி வேட்பாளரின் கார் டிரைவராகச் செயல்படுகிறார் பாலு.

''திருப்பத்தூரில் முகாமிட்டு இருக்கும் முசிறிப் புத்தனைப் பார்க்க எந்த அ. தி. மு. க. தொண்டனும் விரும்பவில்லை. 'மாதவனைச் சுயேச்சையாகவாவது நிற்க வைக்கிறேன்' என்ற எங்கள் தலைவர் உறுதிமொழியைக் காக்கவில்லை. இந்திரா காங்கிரஸ் வேட்பாளருக்குத்தான் ஆதரவு என்று அவர் அறிவித்தது எங்களுக்குப் பேரிடியாக இருந்தது'' என்றார் கீழச்செவல்பட்டியைச் சேர்ந்த அ. தி. மு. க. தொண்டர் ஒருவர்.

இதற்கிடையில் அண்ணா அறிவு வளர்ச்சி மன்றம் என்ற அமைப்பைச் சேர்ந்தவர்கள் திருப்பத்தூரில் பரபரப்பான பட்டி மன்றம் ஒன்றை நடத்தப் போகிறார்கள். பட்டி மன்றத்தின் தலைப்பு: ''இந்திரா காந்தியிடம் திராவிட பாரம்பரியத்தை அடகு வைப்பதில் முன்னணியில் நிற்பது கருணாநிதியா அல்லது எம். ஜி.ஆரா?'' இந்தப் பட்டி மன்றம் திருப்பத்தூரை ஒரு கலக்குக் கலக்கும் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

தொகுதியில் தனிப்பட்ட செல்வாக்கால் உயர்ந்து நிற்கும் மாதவனின் ஆதரவாளர்கள் ஓட்டு ஜனதாவுக்குத்தான் என்று பலர் கூறினாலும், சென்னையில் தங்கியிருக்கும் மாதவனிடம், தொலை பேசியில் பேட்டி கண்டபோது, 'தனக்கென்று தனிச் செல்வாக்கு எதுவும் கிடையாதுஎன்றும், தி.மு.க. அ.தி.மு.க. ஆதரவுதான் தமது செல்வாக்கு' என்றும் கூறினார். மேலும் எம். ஜி. ஆர். இந்திரா காங்கிரஸுக்குத் தமது ஆதரவைத் தெரிவித்த பின்பு அவரைச் சந்திக்கவில்லை என்றும், தேர்தல் நடப்பதற்கு முன்னர் தொகுதிக்குச் செல்லலாம் என்றும் தெரிவித்தார். மாதவனின் ஒரே லட்சியம், தி.மு.க.வும் அ.தி.மு.க.வும் ஒன்று சேர வேண்டும் என்பதுதானாம். அதற்கான முயற்சிகளில் அவர் ஈடுபடுவார் என்று தெரிகிறது. அதுவரை எந்த அரசியல் கட்சியின் சார்பாகவும் தாம் மேடை ஏறிப் பேசப் போவதில்லை என்றும் மாதவன் கூறினார்.

ஒட்டு மொத்தமாகப் பார்க்கையில் கடைசிக் கட்டப் பிரசாரத்தின்போது, வரும் தலைவர்களைப் பொறுத்தே முடிவு இருக்கும் என்று சொல்லத் தோன்றுகிறது.

உண்மையிலேயே தி. மு. க. அ. தி. மு.க. தொண்டர்களின் மனக் கசப்பு, காங்கிரஸ் கட்சிக்கு எதிராகப் பயன்படுத்தப்பட்டு, ஜனதா அல்லது கம்யூனிஸ்ட் கட்சி வெற்றி பெறுமானால், அது நிச்சயமாகத் 'திருப்பத்தூரில் திருப்பமாக இருக்கும். ஆனால் எம்.ஜி ஆர். அந்த அளவுக்கு நிலைமையைச் செல்லவிடமாட்டார் என்றும் கருதப்படுகிறது. களத்தில் இறங்கி, கிராமம் கிராமமாக–பிரசாரம் செய்து இந்திரா காங்கிரஸுக்கு வெற்றியைத் தேடித் தந்தால் தி. மு. க. இ. காங்கிரஸ் உறவை அடியோடு ஒழித்து விடலாம் என்று அவர் நினைப்பதாக அரசியலை ஆழ்ந்து கவனிப்பவர்கள் கூறுகிறார்கள்.

கட்டுரை : ப்ரியன்
படங்கள்: ஜெய்மோகன்

## தமிழ்ப் படங்கள்

● திரையுலகப் புள்ளிகள் சிலருடன் பேசிக்கொண்டிருக்கையில் சில தமிழ்ப் படங்களின் பெயர்கள் ரொம்பத் தமாஷாக இருப்பது தெரிய வந்தது: மூக்குத்தி மீன்கள், கடைசிப் பக்கம், நிலா நிலா ஓடிவா! எல்லாம் பெண்கள் மயம், இதிலென்ன வெட்கம்?, ஜூலி ஐ லவ் யூ!, கணக்கு தப்பு, 1982. (இதில் எத்தனை படங்கள் வெளிவரப் போகின்றனவோ யார் கண்டது?)

## என்ன குழப்பம்!

● சென்னை திருவல்லிக்கேணியில் அரிமுத்து மேஸ்திரி, அரிமுத்து ஆச்சாரி இரண்டு பேர் பெயரிலும் இரண்டு தெருக்கள். 'தெருப் பெயரில் ஜாதி ஒழிப்போம் என மேஸ்திரி ஆச்சாரி இரண்டையும் அழித்து விட்டனர். இப்போது இருப்பது இரு அரிமுத்து தெருக்கள்.' தபால் பட்டுவாடாவும் புதிதாய்ப் போவோருக்கும் குழப்பம். இதற்கெல்லாம் விடிவே கிடையாதா? பிள்ளையாரப்பா... ஸாரி பிள்ளையாரப்பா... ஸாரி.... யாரப்பா நீதான் வழிகாட்டணும்.

—எஸ். சந்திரமௌலி

அரிமுத்து ~~ஆச்சாரி~~ தெரு

அரிமுத்து ~~மேஸ்திரி~~ தெரு

# அந்த அனுகூலம் இன்று இல்லை

பி.என்.சுந்தரேசன்.

இரிக்கெட் மைதானத்தின் மத்தியில் 20.12 மீட்டர் நீளமும் 1.52 மீட்டர் அகலமும் உள்ள பிட்ச் பகுதிதான் இந்தியக் கிரிக்கெட் இன்று வளர்ந்துள்ள விதத்தை நிர்ணயித்திருக்கிறது.

1930களில் நான், கிரிக்கெட் என்பது பந்தை மட்டையால் அடிப்பது மட்டுமல்ல, அதற்கு மேலும் பல நுணுக்கங்கள் அதில் உண்டு என்று முதன் முதலாக உணரத் தொடங்கிய சமயத்தில் பிட்ச் பசுமை நிறம் கொண்டதாய் ஓரளவு புல் படர்ந்து காணப்படும். பந்து வீச்சாளருக்கு, முக்கியமாய் வேகப் பந்து வீச்சாளருக்கு உதவுபடியாக இருக்கும். இதன் மறுபுறமாக பாட்ஸ்மன்கள் வேகப்பந்து வீச்சாளரின் சவாலை ஏற்றுத் தங்கள். திறமையை வளர்த்துக்கொள்ளவும் இத்தகைய பிட்ச் உதவியது.

ஆனால், இந்தியா டெஸ்ட் கிரிக்கெட் ஆட ஆரம்பித்த பிறகு, டெஸ்ட் மாட்சுகளால் நஷ்டம் ஏற்படாமல் கவனித்துக் கொள்வது நிர்வாகிகளின் கடமையாயிற்று. அப்போதெல்லாம் இத்தனை கூட்டம் மாட்சுகளுக்கு வராது. ஆகவே, மாட்சுகள் சீக்கிரம் முடிந்து விடாமல் நிர்ணயித்தபடி மூன்று நாளோ நாலு நாளோ நடந்தே தீரவேண்டும் என்று விரும்பினார்கள். இதையொட்டி பிட்சைப் பலப்படுத்துதல் என்ற தந்திரத்தைக் கையாண்டார்கள். பிட்சின் மேலுள்ள புல்லைச் செதுக்கி எடுத்துவிட்டுக் கனமான ரோலரை நீண்ட நேரம் பயன்படுத்தினார்கள். பிட்சின் ஜீவனெல்லாம் அடித்து விரட்டப்பட்டு விட்டது.

உயிரற்ற பிட்சுகள் வேகப் பந்து வீச்சுக்குச் சாவுமணி அடித்தன. நிஸார் அமர்சிங்குக்குப்பிறகு இங்கே மெய்யான வேகப் பந்து வீச்சாளர் என யாருமே தோன்றவில்லை. ஆனால் இதே நேரத்தில் சுழல் பந்து வீச்சாளர் நிறையப் பேர் உருவானார்கள். வினு மன்காட், குலாம் அகமது, சுபாஷ் குப்தே போன்றவர்கள் மெதுவான , பிட்சுகளைத் தங்களுக்குச் சாதகமாக்கிக் கொள்வதில் நிபுணர்கள்.

மெதுவான பிட்சு காரணமாக நமது பாட்ஸ்மென்களுக்கு வேகப் பந்து வீச்சாளரைச் சந்திக்கிற வாய்ப்பே இல்லாது போய்விட்டது. அயல் நாடுகளில் இவர்களைச் சந்திக்க நேர்ந்தபோது திணறினார்கள். ஆனால் நம் தேசத்துக்கு அயல் நாட்டவர் வந்தபோது நமது பிட்சுகள், அவர்களுடைய மிகச் சிறந்த ஃபாஸ்ட் போலரின் பந்து வீச்சையும் வேகம் குன்றச் செய்துவிட்ட காரணத்தால் நமது பாட்ஸ்மென்களுக்கு அவர்களைச் சந்திப்பது எளிதா யிருந்தது. இதே நேரத்தில் அயல் நாட்டு டீமின் பாட்ஸ்மென்கள் நமது சுழல் பந்து வீச்சாளரைச் சமாளிக்க முடியாமல் திணறினர். எனவே இந்தியாவில் விளையாடப்படும் டெஸ்டுகளில் நமது டீம்களுக்கு வெற்றி வாய்ப்புகள் ஓரளவு அதிகமாகவே இருந்தன. நமது டெஸ்ட் வெற்றிகளை யெல்லாம் அலசினால் அவை பெரும்பாலும் ஸ்பின் போலர்களின் திறமையாலேயே கிட்டியுள்ளன எனத் தெரிய வரும். இதன் உச்ச கட்டத்தை எழுபதுகளில் பிரசன்னா, சந்திரசேகர், பேடி, வெங்கடராகவன் ஆகியோர் இணைந்திருந்தபோது பார்த்தோம். இவர்களுடைய , ஆற்றல், நெருங்கி இருந்து அற்புதமாக ஃபீல்ட் செய்கிற ஸோல்கர் போன்றவர்களால் மேலும் விகசித்தது. காப்டன் பட்டௌடி மீடியம் வேகப் பந்து வீச்சாளரை அறவே அலட்சியம் செய்ய முடிந்தது. அவர்களை ஏதோ ஒரு சம்பிரதாயத்துக்குத்தான் சேர்த்துக் கொள்வது என்றாயிற்று.

ஆனால் 78க்குப் பிறகு இந்த நான்கு வீரர்களின் வீழ்ச்சி தொடங்கியது. ஒவ்வொருவராக இவர்கள் டீமிலிருந்துவெளியேற்றப்பட, மெய்யான வேகப் பந்து வீச்சாளர் கபில் தேவ் அரங்கில் தோன்றினார். சுழல் பந்து வீச்சிலிருந்து முக்கியத்துவம் வேகப் பந்து வீச்சுக்கு மறுபடி திரும்பியது. வேகப் பந்து வீச்சாளருக்கு உதவ இரு சுழல் பந்து வீச்சாளர் என்ற இந்தப் புதிய நிலையும் பாரம்பரியப் பெருமை உடையதுதான். சக்கரம் ஒரு .முழு வட்டம் சுழன்றுள்ளது. ஓரே ஒரு சுழல் பந்து வீச்சாளர் திலீப் தோஷி போதும் என்ற கருத்துடன் கவாஸ்கர் இரு டெஸ்ட்களில் இறங்கியதுண்டு.

நவம்பர் 27 தொடங்கும் டெஸ்ட் தொடரில் இதே பாணியில் அணி அமைப்புத் தொடரும் என எதிர்பார்க்கலாம். எனவே வேகப் பந்து வீச்சாளருக்கு உதவ டெஸ்ட் மைதானத்தில் பசுமை படர்ந்த பிட்சுகளை



# வட்ட மேஜை




● குறைகளைச் சொல்லும்போது அந்தக் குறைகளைக் களைய உடனடி நடவடிக்கை எடுக்காமல், விளக்கம் சொல்லித் தட்டிக் கழிக்கும் தொலைபேசி இலாகாவினரைத் தொலைவில் இருந்து கொண்டே அழகாகச் சாடிய விதம் என் நெஞ்சை நிறையச் செய்து விட்டது. இனியாவது தொலைபேசி இலாகாவினர் தங்களைத் திருத்திக் கொள்ளட்டும். தலையங்கம் தெளிவாக இருந்தது மற்றொரு சிறப்பு.
சென்னை-44 ராஜலக்ஷ்மி சங்கரதாஸ்

● தொலைபேசியின் நூற்றாண்டு பற்றிய தலையங்கம், கல்கியின் துணிச்சலை முழுமையாக உணர்த்தியிருக்கிறது. தொடரட்டும் இது போன்ற தயக்கமற்ற விமர்சனங்கள்.
மாதேமங்கலம் வெ. கோபால்

● ஒலிபிஸா இசை நிகழ்ச்சியினை நேரில் கண்டு ரசிக்க முடியாத என்போன்ற வெளியூர் வாசகர்களுக்குத் தங்களின் 'ஒலிபிஸாவுடன் ஒரு நாள்' கட்டுரைத் தொகுப்பு மன நிறைவைக் கொடுத்தது. ஒலிபிஸாவை நாங்கள் கல்கியின் மூலம் ஒளியில் பார்த்தது போலவே இருந்தது. தாங்க்ஸ் சார்.
வேலூர் வேணுகோபால்

● கார்த்திகைக்குச் சிறப்பிதழ் வெளியிட்ட ஒரே பத்திரிகை கல்கிதான். பாரதி கார்த்திகை மாதம் பிறந்தவர் என்பது எங்களுக்கே இப்போதுதான் தெரியும்.
நயினரகரம் மணி, குலஸ்

● எழுத்தாளர் பி.ஸ்ரீ. பற்றி 'அவரல்லவோ எழுத்தாளர்' என்ற தலைப்பின் கீழ் ஒரு கண்ணீர்க் காவியத்தையே சமைத்துவிட்டார் துமிலன்.
களமருதூர் எம். ரமணி

● ரொம்ப ஞாபக மறதி சார் உங்களுக்கு. அண்மையில் மறைந்த நகைச் சுவை நடிகர் கருணாநிதி சென்னையில் ஹோட்டல் மாமியார் என்ற பெயரில் ஹோட்டல் நடத்தி வந்தது நாடறிந்த விஷயமாயிற்றே! இதை நீங்கள் மறந்துவிட்டு தஞ்சை ரயில் சந்திப்புக்கு அருகில் 'மாமியார் ஓட்டல்' என்று ஒன்று இருப்பதை 'பெரிசா' துணுக்கு வெளியிட்டிருக்கிறீர்களே!
மேலமிஞ்சிப்பட்டு த. யோகநாயகன்

● வெள்ளிப் பனிமலையில் ஒரு வெற்றி- சென்ற குழுவினர் மட்டுமே பெருமைப்படக் கூடிய விஷயமா... இல்லை! தமிழரெல்லாம் பெருமைப்பட வேண்டிய விஷயம்!
நயினரகரம் முத்து

● எப்போதும் அறுவை ஜோக்குகள் சொல்லி அறுக்கும் மகேந்திரன் இந்த முறை முக பாவனைகளைக் காட்டியே நம்மை அறுத்து விட்டார்!
குரோம்பேட்டை பிரகாஷ் முரளி

● ஏன் சார் வாராவாரம் புதுமையே செய்ய வேண்டும் என்று சபதம் எடுத்துக் கொண்டு விட்டீர்களா என்ன? புரியவில்லையா? ஒரு ஸ்டில் ஒரு ஸ்டோரி பகுதியைத் தான் சொல்கிறேன்.
சென்னை ராஜலக்ஷ்மி

● என்ன சார்! கைவசம் பணம் இல்லையா, ஓவியர்களுக்குக் கொடுக்க! விளம்பரத்துக்காகக் கொடுக்கப்பட்ட 'ஸ்டில்'களைப் புத்திசாலித்தனமாகப் பயன்படுத்தி 'ஒரே கல்லில் இரண்டு மாங்காய்' அடித்து விட்டீர்களே! பலே ஆள் சார் நீங்கள்!
மதுரை-16 ஆர். வி. பிரசாத்

---

நிர்வாகிகள் உருவாக்கியிருக்க வேண்டும். நமது தாக்குதல் வெற்றி பெறுவதும் பெறுததும் பிட்சின் அமைப்பு அடிப்படையில்தான் இருக்கும். இங்கேதான் ஒரு சிக்கல். பசுமை படர்ந்த பிட்சில் கபில் தேவும் தோழர்களும் அபாரமாய்ப் பந்து வீச முடியுமெனில் வில்லிஸ், லீவர் தலைமையில் இங்கிலாந்து பௌலர்கள் அதைவிடத் திறம்பட வீசி வெற்றி பெற முடியும். இத்தகைய பிட்சில் அவர்களுக்கு நீண்ட கால அனுபவம் உண்டு. இது நமது பாட்ஸ்மென்களின் பணியை ரொம்பக் கஷ்டமானதாக்குகிறது. முன்பு உள்நாட்டில் நடக்கும் மாட்ச்களில் நமது சுழல் பந்து வீச்சாளர் காரணமாக நமக்கு வெற்றி வாய்ப்புக்கள் அதிகம் என்று பார்த்தோம். அந்த அனுகூலம் இன்று இல்லை.

இங்கிலாந்துக்கு எதிராக இந்தியாவில் ஆடப்பட்ட டெஸ்ட்கள்

| ஆண்டு | வேக வீச்சாளருக்கு விக்கெட்டுகள் | சுழல் வீச்சாளருக்கு விக்கெட்டுகள் |
|---|---|---|
| 33-34 | 35 | 4 |
| 51-52 | 19 | 55 |
| 61-62 | 17 | 50 |
| 72-73 | 3 | 72 |
| 76-77 | 9 | 64 |

ஆங்கிலத்திலிருந்து தமிழாக்கம்:
குட்டி கிருஷ்ணன்



## பாரதி பக்தரே!

உங்களுக்குப் பிறக்கப்போகும் குழந்தைக்கு 500/- பரிசு பெற வாய்ப்பிருக்கிறது.
விவரங்களுக்கு டிசம்பர் 13உ கல்கி
பாரதி நூற்றாண்டு சிறப்பிதழ் காண்க.

## கிரிக்கெட் ரசிகரே!

நீங்கள் ரூ 1500/- வரை பரிசு பெற வாய்ப்பிருக்கிறது. கல்கியில் இடம் பெறுகிற கூப்பன்களை மறக்காமல் பூர்த்தி செய்து அனுப்புங்கள்.





## காலண்டர் பிரியரே!

கல்கி 82 ஸ்பெஷல் —
ஜனவரி 3உ இதழில்
ஏழுமலையானின் வண்ணப்படத்துடன்
இலவச காலண்டர் இணைக்கப் பெறுகிறது.

## அன்புள்ள வாசகரே!

உங்கள் அளப்பரிய மகிழ்ச்சிக்கு
மூன்று முன்னணி எழுத்தாளர்களின்
மூன்று புதிய தொடர்கதைகள்
கல்கி ஜனவரி 17உ பொங்கல் - கிரிக்கெட் மலரில்
ஆரம்பமாகின்றன. மற்றும் பல புதிய அம்சங்கள்.
முழு நீளநாவலும் உண்டு! அதிகபக்கங்கள்
அதே விலை.






யாராவது
ஒருத்தர்,
ரெண்டு பேர்
குனிஞ்சா,
இன்னொருத்தர்
அவுங்க மேலே
ஏறி
உறியை
எட்டிப்
புடிச்சுடலாம்!
லோக் தளம்
பாரதீய ஜனதா
ஜனதா


நிரன் காரி


நீங்க யாரோ தெரியல்லே!..
யாரா இருந்தாலும் சரி...
'கை' சின்னத்துக்கே
ஓட்டு போட்டுடுங்க!
திருப்பத்தூர்

# மீண்டும் கார்வால்!

பகுகுணா வெற்றி வாய்ப்பை இழந்தாரா அல்லது அவரை எதிர்க்கும் இ. காங்கிரஸ் அபேட்சகர் சந்திரமோகன் சிங் நேகி வெற்றி வாய்ப்பை இழந்தாரா என்பதைவிட கார்வால் தொகுதி மக்கள் நாடாளுமன்றத்தில் பிரதிநிதித்துவம் பெறும் வாய்ப்பை இழந்தார்கள் என்பதுதான் முக்கியம். வருத்தப்பட வேண்டியதும் இதற்காகத்தான்.

ஜூன் 14ல் தேர்தல் நடந்தபோது பல முறைகேடுகள் நடந்ததாக வேட்பாளர் பகுகுணா குற்றம் சாட்டப் போக மறுதேர்தல் நடக்கும் ,என்று தேர்தல் கமிஷன் அறிவித்தது. நவம்பர் 22க்கு என நிர்ணயிக்கப்பட்ட அந்த மறுதேர்தலும் இப்போது காலவரையறையின்றி ஒத்திப் போடப்பட்டுள்ளது. இனி அப்பகுதியில் கடும் குளிர் நிலவுமாதலால் அடுத்த கோடைக்கு முன் மறு தேர்தல் நடக்கும் எனத் தோன்றவில்லை. கடந்த பதினெட்டு மாதங்களுக்கு மேலாக நாடாளு மன்றத்தில் பிரதிநிதித்துவம் இல்லாதிருக்கும் இத்தொகுதி மக்கள் மேலும் பல மாதங்கள் காத்திருக்க வேண்டியதுதான்.

நவம்பர் 22ல் தேர்தல் நடக்காது என்று தேர்தல் கமிஷன் அறிவித்தபோது அதற்கு அது கூறிய காரணம் திடுக்கிட வைப்பதாக இருந்தது. மாநில அரசின் ஒத்துழைப்பு இல்லை என்பதுதான் அந்தக் காரணம்! உத்தரப் பிரேதச அரசு தேர்தல் கமிஷனுக்கு எழுதிய கடிதத்தில் சிறைத் தொழிலாளர்கள், மாணவர்கள், மாநில அரசு ஊழியர்கள் ஆகியவர்கள் எல்லாம் வேலை நிறுத்தம் செய்யப் போவதாக அறிவித்துள்ளதாகவும் தேர்தல் நடக்கும்போது போதிய போலீஸ் பாதுகாப்பு தன்னால் தர இயலாது என்றும் கூறியுள்ளது. இது வெட்கக்கேடான விஷயம். இது மாநிலம் தழுவிய தேர்தல் அல்ல ஒரே ஒரு தொகுதியில் நடக்கும் உபதேர்தல் என்பதை நோக்குமிடத்து இது வெறும் சால்ஜாப்புதான் என்பது புரிந்து போகும்.

மாநில அரசின் கைவிரிப்பையொட்டி தேர்தல் கமிஷன் தேர்தலை ஒத்திப் போட, எதிர்த்தரப்பினர், ''இது என்ன ஜனநாயகம்?'' என்று சாடுகின்றனர். தேர்தல் கமிஷன் ஆட்சியிலுள்ளோரின் கைப்பாவையாகி வருவதாகக் குற்றம் சாட்டுகின்றனர்.

இந்தத் தாக்குதலைச் சமாளிக்க முடியாத உ.பி. அரசு ஒரு பல்டி அடித்தது. ''நாங்கள் தேர்தலை ஒத்திப் போடவா சொன்னோம்? இங்கு உள்ள நிலவரத்தை விளக்கினோம். தேர்தல் நடத்த வேண்டாம் என்று தீர்மானித்தது நாங்களல்லவே'' என்றது.

இது அபத்தமான வாதம் என்பதைப் பிரதம தேர்தல் கமிஷனர் எடுத்துக் காட்டியுள்ளார். '''நாங்கள் ஒத்துழைக்க மாட்டோம், பாதுகாப்புத் தர மாட்டோம் ஆனால் தேர்தலை நடத்த வேண்டாம் என்று சொல்லவில்லை' என்றால் என்ன அர்த்தம்? உ.பி. அரசின் கடிதம் தேர்தலை ஒத்திப் போடுமாறு கேட்டுக் கொண்டதற்கு ஒப்பானதுதான்'' என்று பதிலடி தந்தார். மத்திய அரசை போலீஸ் உதவி கேளுங்கள் என்று தாம் கூறிய யோசனையையும் மாநில அரசு ஏதோ சாக்குப் போக்கு சொல்லித் தட்டிக் கழித்து விட்டதையும் பிரதம தேர்தல் கமிஷனர் ஷக்தர் விவரித்துள்ளார்.

''கார்வால் தேர்தல் ஒத்தி வைப்பு விஷயம் மாநில அரசுக்கும் தேர்தல் கமிஷனுக்கும் இடையேயான விவகாரம். இதில் மத்திய அரசுக்கு ஒரு சம்பந்தமுமில்லை'' என்று ஜெயில் சிங் பொறுப்பைத் தட்டிக் கழித்திருப்பது விந்தை! ஏதோ மாநில விவகாரங்களில் தலையிடுவதை அபசாரமெனக் கருதும் மத்திய ஆட்சியை நாம் பெற்றிருப்பது போலல்லவா ஜெயில் சிங் பேசுகிறார்! சொன்னாலும் பொருந்தச் சொல்ல வேண்டாமா?

ஜெயில் சிங்கின் பேச்சு, இது நிர்வாக விஷயம் மட்டுமல்ல, அரசியல் உள்நோக்கமும் இருக்கிறது என்ற எண்ணத்தை உறுதிப்படுத்தவே செய்கிறது.

1981 நவம்பர் 29

துன்மதி கார்த்திகை 14

மலர்: 40 இதழ்: 18



கல்கி



தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற எங்கள்
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்

# பஸ்ஸிலே



# கேட்டவை

## ரூட் நெ. 17-ஏ 12-11-81

''தமிழக அரசு ஹெலிகாப்டருக்கு ஆர்டர் கொடுத்திடுச்சாம்!''

'' 'முதல்வருடன் முதல் பயணம்'னு வெள்ளோட்ட விழா பற்றி எழுத மணியன் பேருவைத் நீட்டிக்கிட்டிருப்பாரே!''

''சினிமா நாட்கள் ஞாபகத்திலே ஹெலிகாப்டருக்கு 'ஜெயன்'னு முதல்வர் பேர் வைப்பாரு. உடனே கலைஞர், 'தமிழகத்திலே எல்லாமே மலையாளமாயிட்டு வருது'ன்னு அலறுவாரு!''

''அப்பாலே 'முத்துராமன்'னு பேர் சூட்ட முதல்வர் இன்னொரு ஹெலிகாப்டர் வாங்கியாகணும்!''

''வாங்கட்டுமேய்யா! மக்கள் வரிப் பணம் எதுக்கு இருக்குது?''

''ஹெலிகாப்டர் வாங்கிட்டா ஆச்சா? ஸ்டண்ட்காட்டிக் கயிற்று ஏணிவழியா அதுல முதல்வர் ஏறி இறங்க 'முடியாதுல்ல? ஹெலிகாப்டர் தளங்களை அங்கங்கே அமைக்கணும்!''



''காண்ட்ராக்ட் எடுக்க ஆளுங்களுக்கா பஞ்சம்?''

''பஞ்சமோ வெள்ளமோ அடிக்கடி வரணும். அப்பத்தானே, வரட்சி அல்லது வெள்ள நிவாரணப் பணிகளைப் பார்வையிட அடிக்கடி முதல்வர் ஹெலிகாப்டரில் ஏறிப் போகலாம்!''

## ரூட் நெ. 21-பி 11-11-81

''ஐ.எம். எஃப். கிட்டே நம்மஅரசாங்கம் வாங்கியிருக்கிற ஐயாயிரம் கோடி ரூபாய் கடனைப் புத்திசாலித்தனமா முதலீடு செய்து செல்வத்தைப் பெருக்காம, வீண் விரயம் பண்ணினு என்ன நடக்கும் தெரியுமா?''

''என்ன நடக்கும்?''

''சூடான் நாட்டுக்கு நேர்ந்த கதி நமக்கும் நேரும்! அங்கே அரசு வாங்கின கடனை ஒழுங்கா திருப்பி தராததாலே ஐ. எம். எஃப். அதிகாரிங்க வந்து உட்கார்ந்துக்கிட்டு, 'இப்படிச் செய், அப்படிச் செய்'னு அதிகாரம் பண்ணுறாங்க. சூடான் நாணயத்தின் மதிப்பு குறைக்கப்பட்டது. அமைச்சரவை டிஸ்மிஸ் ஆகியது. அரசு அளித்து வந்த பல மானியங்களுக்கு முற்றுப்புள்ளி விழுந்தது!''

''அதாவது சூடான் அரசுக்கும் மேம்பட்ட ஒரு அரசாக ஐ.எம். எஃப். இயங்கி, அந்தத் தேசத்தை அடிமைப்படுத்திடுச்சுன்னு சொல்லுங்க!''

''அதேதான்!''




## ரூட் நெ. 45 9-11-81

''பத்திரிகைகளிலே வர விளம்பரங்களைக் கம்ப்யூட்டர் மூலம் ஆராய்ஞ்சதிலே மத்திய சர்க்கார், மாநில சர்க்கார் எல்லாமே 'விளம்பர சர்க்கார்'தான்னு நிச்சயமாயிடுச்சு! தங்கள் பிராபல்யத்தை அதிகரிக்கக்கிறதுக்காக முதல்வர்கள் தங்கள் படத்தையும் பிரதமர் படத்தையும் போட்டுப் பக்கம் பக்கமாய் விளம்பரப்படுத்திக்கிறாங்க! இப்படித் தங்கள் பிரபையை வளர்த்துக்கறதுக்கு வருஷத்திலே ஐந்தரைக் கோடி ரூபாய் செலவழிக்கிறாங்க!''

''நாசமாப் போச்சு போங்க! முன்னெல்லாம் சர்க்கார் விளம்பரம்னு டெண்டர் நோட்டீசு கோர்ட் நோட்டீசுதான் வரும்!''

''ஆமாம், அப்புறம் கொஞ்சநாள் குடும்பக் கட்டுப்பாடு விளம்பரம், சேமிப்பை ஊக்குவிக்கும் விளம்பரம்னு வந்துச்சு. இப்ப எல்லாம்' சுய விளம்பரம்தான்!''

''மக்களுடைய வரிப் பணத்திலே இப்படித் தம்பட்டம் அடிக்கக்க ஆளும் கட்சிக்கு வாய்ப்பு இருக்கு. தர்ம அதர்மம் பார்க்காம விளம்பரம் தேடிக்கிறாங்க. எதிர்க்கட்சிங்க கையைப் பிசைஞ்சுக்கிட்டு ஏங்க வேண்டியதுதான்!''

''லாட்டரி விளம்பரங்களுக்கு ஒரு வருஷத்தில் மூணு கோடி செலவழிக்கிறாங்களாம்!''

''ஆசை காட்டி மோசம் பண்ண மூணு கோடி!''

-குட்டிகிருஷ்ணன்

## ரசிகமணி ரசித்தமணிகள்

# கம்பர் விழா

மீ. ப. சோமு

சென்னை எவரெஸ்ட் விடுதியின் நிறுவனர் எஸ். கே. சுந்தரம் அந்த நாளில் பல கலைப் பணிகளுக்குப் பெரிதும் உதவியவர். திருநெல்வேலிக்காரர். நெல்லையில் என் தந்தையும் அவர் தந்தை கிருஷ்ணய்யரும் நெருங்கிய நண்பர்கள். என் தாயாருக்கும் அவர் தாயாருக்கும் கேரள மாநிலத்தில் அடுத்தடுத்த வீடு! டி.கே.சி. அவர்களிடம் என்னைப் போலவே சுந்தரம் அவர்களுக்கு ஈடுபாடு. கல்கி கிருஷ்ணமூர்த்தி அவர்களிடமும் அப்படியே!

சென்ற வாரம் கம்பர் விழாவில் கல்கி அவர்களின் வரவேற்புரையைப் பார்த்தோம். ரா.பி. அவர்களும் மற்றவர்களும் ரசிகமணியை எப்படி மதிப்புரைசெய்தார்கள் என்பதையும் பார்த்தோம். இந்த விழாவின் பொருளாதாரப் பொறுப்பை ஏற்றுக் கொண்டிருந்த எஸ்.கே. சுந்தரம் எப்படிப் பார்த்தார்?

இதோ ஒரு கடிதம். மற்றவர்களின் மதிப்பீடுகளுக்கு நடுவே ரசிகமணி தம்மைத் தாம் ஒரு 'அகப்பைக்காரன்' என்றே சொல்லிக் கொள்வதை முக்கியமாகப் பார்க்க வேண்டும்.

திருக்குற்றாலம்
28-4-1944

அருமை நண்பர் கலைவள்ளல் எஸ். கே. சுந்தரம் அவர்களுக்கு,

நமஸ்காரம். தங்கள் அருமைக் கடிதம் கிடைத்தது.

உலகத்தில் வெகு சின்னக் காரியங்கள்கூட நம்மை ஆட்டிவிடும். நிம்மதி இல்லாமல் செய்துவிடும்.

மீனம்பாக்கத்திலிருந்தபோது ஸ்டேஷனுக்கு ரயில் ஏறப் போவேன். பிளாட்பாரத்தில் கால் எடுத்து வைப்பேன். அந்த நிமிஷமே ரயில் புறப்பட்டுப் போய்விடும். இல்லாத ஏமாற்றமும், எரிச்சலும் வந்து மனசைத் தொந்தரவு செய்யும். காரியம் என்று அவசரமாக ஏதேனும்உண்டோ? கிடையாது. ராஜாஜி கல்கி முதலிய நண்பர்களைப் பார்த்துச் சாயங்கால நேரத்தைக் கழிக்கிற காரியந்தான்.

மேலும் அடுத்த ஆறாவது நிமிஷம் அடுத்த வண்டி வந்துவிடும். ஜோராய் ஏறிக் கொண்டு போகலாம். இதையெல்லாம் கணக்கிட்டு யோசித்தால் எரிச்சல்படவேண்டியதே இல்லைதான். ஆனாலும் நம்முடைய சபலம் அப்படி இருக்கிறது!

தாங்கள் கம்பர் விழாவுக்காக எத்தனையோ மாசங்கள் வேலை செய்தீர்கள். எவ்வளவோ செலவு செய்தீர்கள். எத்தனையோ இடங்களில் விழா எடுக்க ஏற்பாடு செய்தீர்கள். கரடி, புலி, சிங்கம், இருக்கும்இடங்களில் கூட ஏற்பாடு செய்தீர்கள். அவைகள் கடிக்கும் என்று அருமை அம்பிக்குச் சொன்ன மாதிரி எனக்குச் சொன்னீர்கள். கரடி முதலிய பிராணிகள் இல்லாத இடத்தில் எனக்கு அபாரமாக உபசாரம் செய்தீர்கள். ஆரத்திகூட எடுக்கச் சொன்னீர்கள், திருஷ்டி விழுந்துவிடக் கூடாது என்பதாக! தாங்க முடியாதபடி ரோஜாப்பூ ஆரம் போட்டீர்கள். அதைவிடத் தாங்க முடியாதபடி அன்பையும், அருமையையும் குழைத்துப் பூசி முழுகடித்து விட்டீர்கள்.

எல்லாம் எதற்கு? திருநாள் சிறப்பாய் நடக்க வேண்டும் என்ற ஒரு எண்ணத்திற்



காகத்தான். அது திருப்திகரமாக அமையாது போயிற்று என்றால் மனசு சஞ்சலம் அடையாமல் என்ன செய்யும்? எலெக்ட்ரிக் ரயில் தவறிய காரியமா! ஆனாலும் கம்பர் கவி ஒன்றைப் பாடினால் எல்லாத் துயரமும் ஓடிப்போய்விடும்.

''ஓதிமம் ஒதுங்கக் கண்ட'' என்ற பாட்டு ஒன்று போதும். அல்லது,

''எத்திக்கும் போற்றும்
இராமன் திருக்கதையைத்
தித்திக்கும் செந்தமிழில்
செய்தளித்து — நித்தமுமே

அம்புலியில் மக்கள்
அமுதம் அருந்த வைத்த
கம்பன் கவியே
கவி!''

என்ற கவிஞர் தே.வியின் பாடலைச் சொன்னாலே போதும். பொருளைப் பேய் பிடித்து ஆட்டுகிற இந்த உலகத்தை விட்டு அன்பு மயமான வேறு உலகத்துக்கு அப்படியே போய்விடலாம். பண்டிதர்கள் ஸ்காலர்கள் எல்லாரும் என்னை என்ன பாடெல்லாமோ படுத்தித்தான் இருக்கிறார்கள். அவைகளை எண்ணினால் கொஞ்சம் டெம்பரேச்சர் உடலில் ஏறுவதாகத் தோன்றும். ஒரு தமிழ்க் கவியைப் பாட ஆரம்பித்து விட்டால் அப்படியே உள்ளம் உடல் எல்லாம் குளிர்ந்துவிடும். என்னைப் போலத்தானே தாங்களும் கலையில் கரைகிறவர்கள்தானே. தமிழ்க் கவியால் உள்ளத்துக்கும் உடலுக்கும் சுகம் ஏற்படும்!

இதெல்லாம் ஏதோ ஏமாற்றுக் கச்சவடம் என்று எண்ண வேண்டாம். எத்தனையோ பெரியோர்கள் கண்ட அனுபவம்தான்.

கடவுள் ஏவுதற் கர்த்தா: கம்பர் இயற்றுதற் கர்த்தா. இப்படிச் சமையலாகியிருந்த தேவாமிருதத்தை ஏதோ ஒருவன் அகப்பையை எடுத்து விளம்ப ஆரம்பித்தான். அவ்வளவுதான். நான் அகப்பைக்காரன் தான்! எனக்குத் தாங்கள் கூறும் புகழும் செய்யும் உபசாரமும் கம்பருக்கே கிடைத்திராதோ என்று எண்ணத் தோன்றுகிறது. கம்பர் பற்றியும், தமிழ் பற்றியும் இந்த அக்கிரமமும் இதற்கு மேலும் செய்யலாம் தாங்கள்! எல்லாவற்றிற்கும் என் மனமார்ந்த நன்றி.

'எவரெஸ்டில்' கம்பர் கொடி பறக்கிறது. அதை யாரும் அசைக்க முடியாது. கொடியின் கொழுந்து குமரியை எட்டும். பம்பாய்க்கும், தில்லிக்கும், கல்கத்தாவுக்கும் நிழல் கொடுக்கும்! சந்தேகம் இல்லை. ரொம்ப சந்தோஷம். எவரெஸ்டு மேலும் மேலும் ஓங்குக!!!

# எவ்வளவு தெரியும்? — இலக்கியத்தைப் பற்றி!

(1) தேன் என்றால் நினைவுக்கு வரவேண்டிய நூல் எது?

(அ) பதிற்றுப் பத்து (ஆ) கம்பராமாயணம் (இ) திருவாசகம் (ஈ) அகநானூறு.

(2) அவன் பாடு அதோகதிதான் என்கிறார்கள். அதோகதி என்றால் என்ன?

(அ) சமுத்திரம் (ஆ) நெருப்பு (இ) கழுமரம் (ஈ) நரகம்.

(3) அழலோன் என்பது ஒரு கோளின்பெயர். அது எது?

(அ) செவ்வாய் (ஆ) சூரியன் (இ) புதன் (ஈ) வெள்ளி.

(4) பறம்பு மலை இப்போது என்ன பெயரில் வழங்குகிறது?

(அ) ஆனைமலை (ஆ) பிரான்மலை (இ) சுவாமிமலை (ஈ) விராலிமலை.

(5) இலங்கைக்குத் தெற்கே இருந்து கடலுள் அழிந்ததாய்ச் சொல்லப்படும் நிலப்பரப்பில் ஓடிய ஆறு எது?

(அ) சரயூ (ஆ) வருணை (இ) பஃறுளி (ஈ) பொருநை.

(6) 'கும்பிட்டு வாழ்கிலேன் யான்' என்று நெஞ்சு நிமிர்த்திய பாசமிக்க தம்பியைக் கம்பர் காட்டுவார். அவன் யார்?

(அ) சத்ருக்னன் (ஆ) கும்பகர்ணன் (இ) சுக்ரீவன் (ஈ) விபீஷணன்.

(7) பின்வரும் சொற்களுள் ஒன்று யானை என்னும் பொருள்படும். அது....?

(அ) இரலை (ஆ) மிஞிறு (இ) நாகம் (ஈ) மடங்கல்.

(8) பண்டைத் தமிழர்கள் மேலை நாடுகளுக்கு ஏற்றுமதி செய்த செல்வங்களுள் ஒன்று ஏறக்குறைய அதே பெயரில் ஆங்கிலமாகிவிட்டது. அது எது?

(அ) மாணிக்கம் (ஆ) பவளம் (இ) மரகதம் (ஈ) பரல்.

(9) புறநானூறு — இதில் கைக்குக் கிடைத்துள்ள பாடல்கள் எவ்வளவு?

(அ) 398 (ஆ) 401 (இ) 317 (ஈ) 363

10) இந்திர கோபம் என்பது ஒரு பூச்சி. அது எது?

(அ) சில்வண்டு (ஆ) தேனீ (இ) தம்பலப் பூச்சி (ஈ) வெந்திப் பூச்சி.

விடை: 60ம் பக்கம் பார்க்க

# ஒப்பிட்டுப்பார்க்க, உடனுறைத்த பானங்களின் விலைகள் (ரூ.). வளையாக் கலத்துப் பேக்கிங்.

நியூட்ரமுல். அமுல் படைப்பு. உச்சத் தரத்திற்கு இதுவே உத்தரவாத நற்சாட்சி. கோக்கோ ஆட்சி. ஆரோக்கியமிகு அமுல் பால். அருமையான மால்ட். அத்தியாவசிய வைட்டமின்கள், உலோக தாதுக்கள். ஒருங்கே பலம்பெருக்கும் பண்புகளின் சிகரம்.

இவ்வளவுக்கும் விலை, வேறெதனையும் விட சுமார் 4 ரூபா குறைவு.

மிடுக்குடன் நடப்பீர் நியூட்ரமுல் வீரராய்... மிஞ்சும் பணத்தோடு.

வேறெதனையும் விட சுமார் 4 ரூபா விலை குறைவு.

நியூட்ரமுல் விலையோடு ஒப்பிட, உடனுறைத்த பானங்களின் விலைகள் (ரூ.)*
நாந் :ப்ளெக்ஸிபிள் பேக்கிங்

| | 500 கிராம் | 800 கிராம் | 1000 கிராம் |
|---|---|---|---|
| நியூட்ரமுல் டின் | 13.83 | – | 26.67 |
| மால்டோவா புட்டி | 17.58 | – | – |
| போர்ன்விடா டின் | 17.68 | 26.97 | – |
| பூஸ்ட் புட்டி | 18.87 | – | – |

* '81 மார்ச் நிலவரப்படி. அனுபோகியருக்கான உச்சவிலைகள். தல வரிகள் தனி.

















விற்பனைக்கு விநியோகம்:
குஜராத் கோ-ஆப்பரேட்டிவ் மில்க் மார்க்கெட்டிங் ஃபெடரேஷன் லிமிடெட், ஆனந்த் 388 001

daCunha/81/GCM/53/TM

## 9

மறுநாள் காலை சரியாக ஏழு மணிக்கு இரிஷ் ப்ரியாவின் படுக்கை அறைக்குள் கதவைத் தள்ளிக்கொண்டு நுழைந்தான். அவன் கண்கள் நேராகப் படுக்கையை நோக்கிப் பாய்ந்தன. ப்ரியா வாயைத்திறந்து கொண்டு மல்லாந்து படுத்துக் கிடந்தாள். கம்பளி அவள் உடலைக் கழுத்துவரை மூடி மறைத்திருந்தது. கட்டிலுக்குப் பக்கத்தில் ஒரு முக்காலி. அதன் மேல் ஒரு கண்ணாடி டம்ளர். அதற்கு அடியில் சிறிதளவு பால். இதை எல்லாம் சற்று நேரம் இமை கொட்டாமல் இரிஷ் பார்த்துக் கொண்டிருந்தான். பிறகு மெதுவாக நகர்ந்து ப்ரியாவின் நெற்றி, மூக்கு, கன்னம் இவைகளைத் தொட்டுப் பார்த்தான். அவசர அவசரமாகப் போர்வைக் குள்ளே கைகளை விட்டுக் கால் பாதங்களைத் தடவிப் பார்த்தான்.

அவன் கண்கள் அகல விரிந்தன. ஒரு நொடி அப்படியே கல்லாகி நின்று விட்டான். மின்சாரத்தைத் தொட்டது போல் ப்ரியாவை விட்டு விலகி நிமிர்ந்து நின்றான். அவனுக்கு மூச்சு வாங்கத் தொடங்கியது.

ப்ரியா.... அவள் இன்னும் சாகவில்லை! உயிரோடுதான் இருக்கிறாள். நடக்கக் கூடாதது, நடக்க முடியாதது என்று எண்ணியது நடந்து விட்டது....

கைகால்கள் உதற வெளியே ஓடினான், ஹாலை நோக்கி.

''டாக்டர்... ப்ரியா இன்னும் சாகலே! அவ இன்னும் உயிரோடுதான் இருக்கா. நான் தொட்டுப் பார்த்துத்தான் சொல்றேன், உடம்பெல்லாம் சூடாவே இருக்கு...'' அவன் குரலில் பயம், பயங்கரம் இரண்டும் சேர்ந்து ஒலித்தன.

டாக்டர் ஆனந்த் சோஃபாவில் தம் இரண்டு கைகளையும் கோத்தவாறு அமைதியாக உட்கார்ந்திருந்தார். இரிஷின் வார்த்தைகளைக் கேட்ட அவருக்கு எந்த விதமாக சலனமும் ஏற்படவில்லை.

''டேய் ஜம்பு! நீ சொல்ற மாதிரி நடக்க முடியாதுடா. ராத்திரி ரொம்ப எக்ஸ்ட்ராவாப் போட்டியா? அதான் இப்படி உளர்றே. டேய் ஜம்பு! என்னோட மருந்து இதுவரைக்கும் ஃபெயில் ஆனதே இல்லையாதுடா. இரு நான் வந்து பார்க்கறேன். கொஞ்ச நேர முன்னாடிச் செத்துருந்தா பாடி இன்னும் கூட சூடாவே இருக்கும். சில நேரங்கள்ல.....

டாக்டர் எழுந்து ப்ரியாவின் படுக்கை அறைக்குள் நுழைந்தார். சற்று நேரம் ப்ரியாவை உற்றுப் பார்த்துவிட்டு அவள் கண்களைத் திறந்து பார்த்தார்.

''டேய் ஜம்பு!''

''டாக்டர்! என்னை ஜம்புன்னு கூப்பிடாதீங்க. இப்ப நான் இரிஷ். நீங்களே இந்தப் புதுப் பேரைக் குடுத்துட்டுப் பழைய பேரைக் கூப்பிடறீங்களே, என்னங்க நீங்க!''

''டேய் லோஃபர் கீப் கொயட். டேய் ஜம்பு இவ அந்த மாத்திரையைச் சாப்பிட்டுட்டு உயிரோட இருக்க முடியாதுடா. அந்த ரெண்டு மாத்திரையைச் சாப்பிட்டவங்க யாரும் இதுவரைக்கும் பொழச்சதே இல்லே.''

''டாக்டர் ஒருவேளை ஒங்க மருந்து இந்தப் பொம்பளை விஷயத்திலே வேலை செய்யலியோ? இவளுக்கு ஒடம்புலே பவுரு ஜாஸ்தியா இருந்தா...''



''டேய் ஜம்பு... டோண்ட் டாக் நான்சென்ஸ்... இந்த மாத்திரையைச் சாப்பிட்டாலே குளோஸ் ஆகணும். வேறெ வழியே கெடையாது..... அந்த அம்மாவுக்குக் குடுத்தோமே அதாண்டா ஒங்க மம்மி பார்வதி... அவ பொட்டுன்னு போயிடல்லே?''

''டாக்டர் அந்த அம்மா பூட்டாங்க கரெக்ட். அவ கிழவி... பைத்தியம் வேறெ... இந்தப் பொம்பளை சின்னவ கும்முனு கீரா அதான் வேலே செய்யலே. எப்படி.''

''டேய் ஜம்பு ஒளராதேடா. யாரா இருந்தாலும் இதைச் சாப்பிட்டா க்ளோஸ்! நான் கொடுத்துச் சாப்பிட்டவங்க அவ்வளவு பேரும் க்ளோஸ்.''

''டாக்டர் ஒருவேளை இந்தப் பொம்பளை அந்த மாத்திரையைச் சாப்பிடலயோ என்னவோ!''

டாக்டர் ஆனந்த் தலையை நிமிர்த்தி கிரிஷை உற்றுப் பார்த்தார். சற்று நேரம் அங்கு பயங்கர அமைதி ஊசலாடியது.

''ஜம்பு! என்னடா சொல்றே நீ... ப்ரியா மாத்திரையை ஏன் சாப்பிடாம இருக்கணும்? அவளுக்கு நம்மப் பத்தியே, நம்ம ப்ளானைப் பத்தியே ஒண்ணுமே தெரியாதே... நீதான் கிரிஷ். பார்வதியோட காணாமப் போன புள்ளே...அவளோட வருங்காலப் புருஷன் அப்படீன்னு அவ நம்பினளே... அப்படி இருக்கும்



போது அவள் மாத்திரையைச் சாப்பிடாம இருக்கிறதுக்கு என்ன காரணம்? ஒண்ணும் புரியலெயே....''

''டாக்டர் ஒங்களுக்கே புரியலேன்னு எனக்கு என்ன புரியப் போவுது... ஆனா இப்ப மட்டும் ஒண்ணும் முழுகிப் போகலே. அவளை ஒரே நிமிஷத்திலே தீத்துடறேன். நம்ம கைக்குட்டை இருக்குது. அவ கழுத்து இருக்குது. ரெண்டு செகண்ட்லே அவ அம்பேல்! என்ன சொல்றீங்க? இந்தப் பொண்ணைக் க்ளோஸ் பண்ணிணும்னு அந்தப் பைத்தியக்காரச்சி சொத்து, பணம்லாம் நம்புளுது...''

''ஜம்பு இந்த ஐடியா கூடப் பரவாயில்லே. வேலையை ஆரம்பி...''

ஜம்பு ப்ரியாவுக்கு அருகே நகர்ந்தான். தன் கழுத்தைச் சுற்றியிருந்த ஒரு நீளமான அழுக்கான வண்ணக் கைக்குட்டையை வெளியே இழுத்தான். அதை இரண்டு கைகளாலும் முறுக்கேற்றினான். கம்பளிப் போர்வையை இழுத்து அகற்றிவிட்டு அவள் உடலை வருடினான்.

''டாக்டர் கும்முன்னு கீரா. அன்னிக்கி ராத்திரி சும்மா தொட்டுத்தான் பார்த்தேன். வேறே ஒண்ணும் நடக்கலே. இப்ப என்ன டான்னு ஆளையே க்ளோஸ்பண்ண வேண்டியிருக்கு. நல்ல சரக்கு..வேஸ்டாப் போவுது!''

''டேய் ஜம்பு. டோண்ட் வேஸ்ட் டைம். வேலெயெ முடிடா. அந்தப் பொம்பளை பணம் நம்ம கையிலே வந்துடுச்சுன்னு இதவிட நல்ல சரக்கெல்லாம் பிடிக்கலாம். இப்ப வேலையைக் கவனி.''

இரும்பு போன்ற கைகள் மெல்லிய பெண்ணின் கழுத்தை ஒரு முறை தடவிப் பார்த்து முறுக்கேறிய கைக்குட்டையைக் கழுத்தைச் சுற்றி வளைக்க ஆரம்பித்தன...

''ஹலோ டாக்டர் ஆனந்த்! ஹலோ கிரிஷ்!...இல்லே ஜம்புன்னு கூப்பிடணுமா?''

''ப்ரியா கண்களைத் திறந்து கொண்டே லேசாகச் சிரித்தாள்.

''உ ஒன்னை ஒரே நிமிஷத்துலே தீத்துடறேன் பாரு. நம்ம கிட்டயா வெளையாடறே? தப்பிச்சுக்கினேன்னு நெனச்சியா? அதான் இல்லே.''

''என்னது! நம்ம ராமசாமி ஆபீஸ்லேயே உடற்பயிற்சி செய்ய ஆரம்பிச்சிட்டார்!''

''டாக்டர் அவரைத் தூங்கி எழுந்ததும் கண்டிப்பாக உடற்பயிற்சி செய்யச் சொல்லியிருக்காராம்'' எஸ். அன்பு




ஜம்பு அவள் கழுத்தை அழுத்திக் கொண்டே கத்தினான்.

''டேய் ஜம்பு! க்விக்.... ப்ரியா நம்ம பேசினே எல்லாத்தையும் கேட்டுண்டிருந்திருக்காடா. விடாதே அவளை. அவளை விட்டோம்னு நாம்ப மாட்டிப்போம்... பிச் நோஸ் டூ மச். சீக்கிரம்.''

''டாக்டர்! நான் மட்டும் இல்லே. மத்தவங்களும் நீங்க பேசினதைக் கேட்டுக்கிட்டிருந்தாங்க. அவங்களுக்கும் நெறையவே தெரியும்!'' — ப்ரியா ஜம்புவின் பிடியிலிருந்து திமிறிக் கொண்டே பேசினாள்.

ஜம்பு பொங்கி வரும் வெறியில் ப்ரியாவின் கன்னத்தில் பலமாக அறைந்தான். ப்ரியா வலி தாங்காமல் அலறினாள்.

''வேறே ஆள் யாருடி சொல்லு. இல்லேன்னு தொலைச்சிடுவேன்!''

''ஸ்டாப் இட். ஹாண்ட்ஸ் அப்! கையை அப்படியே உயர்த்தி நில்லுங்கடா. நகர்ந்தீங்கன்னு சுட்டுடுவோம்.''

பாத்ரூமிலிருந்து ஒரு பயங்கரக் குரல் அலறியது. உடனே கதவைத் திறந்து கொண்டு துப்பாக்கியை உயர்த்தியபடியே போலீஸ் இன்ஸ்பெக்டர் பவித்ரன் மற்றும் நான்கு போலீஸ்காரர்கள் பாத்ரூமிலிருந்து தடதடவென்று ஓடி வந்தார்கள்!

ஜம்புவும் டாக்டர் ஆனந்தும் அப்படியே மலைத்துப் போய்த் திரைப் படங்களில் வரும் ''ஃப்ரீஸை''ப் போன்று நின்றுவிட்டார்கள்.

''இன்ஸ்பெக்டர்... நீங்க... நீங்க....''

டாக்டர் ஆனந்தினால் அதற்கு மேல் பேச முடியவில்லை.

''எஸ் டாக்டர் ஆனந்த். நாங்க இந்த பாத்ரூம்லதான் மணிக் கணக்கா உட்கார்ந்துக்கிட்டிருந்தோம். உங்களுக்காகத்தான் காத்துக்கிட்டிருந்தோம். நீங்களும் ஜம்புவும் பேசினதை யெல்லாம் கேட்டுக்கிட்டிருந்தோம். அதை டேப் ரெக்கார்டலயும் ஏத்தியிருக்கோம். டாக்டர் ஆனந்த் நீங்க கெஸ் பண்ணது கரெக்ட். மிஸ் ப்ரியா அந்த டேப்லெட்ஸைச் சாப்பிடலே. அதான் மிஸஸ் பார்வதி அம்மாளுக்குக் கொடுத்தீங்களே அந்த டேப்லெட்ஸ்! அதை இவங்க நம்ம வக்கீல் மீஞ்சூர் கோவிந்தராஜாச்சாரி மூலமா எங்களுக்கு அனுப்பிச்சுட்டாங்க நேத்து ராத்திரியே... நாங்க அதை கெமிகல் அனலிஸ்டுக்கு அனுப்பியிருக்கோம். அதுக்கு முன்னாடியே டேப்லெட் பயங்கர விஷம்னு ஒங்க வாயாலேயே விஷயம் வெளியே வந்துடுச்சு... டேய் ஜம்பு நகராதே. சுட்டுடுவேன்... இந்தாப்பா ஒன் செவண்டி ஃபோர், ரெண்டு பேரையும் அரெஸ்ட் பண்ணு. டாக்டர் ஆனந்த், ஜம்பு யூ ஆர் போத் அண்டர் அரெஸ்ட் ஃபார் மர்டர், சீட்டிங் அண்ட் இம்பர்ஸனேஷன்... டாக்டர் ஆனந்த் இந்த ஊர்லே நீங்க பெரிய டாக்டர். பிக் மேன். நீங்க இப்படி....ம்...ம்... வெளியே நடங்க. மீதியெல்லாம் கோர்ட்லே பாத்துக்குவோம்.''

டாக்டர் ஆனந்த் தம் முகத்தை வேறு பக்கமாகத் திருப்பிக் கொண்டார்.

''ஆல்ரைட். இந்தாப்பா ஒன் செவண்டி ஃபோர் இவங்க ரெண்டு பேரையும் வேன்லெ ஏத்து. அந்தத் தெருக் கோடியிலே நின்னுக்கிட்

## பெருகிவரும் என் கடமைகள் எதிர்காலத்தில் என் சேமிப்புச் சக்தியை குறைக்கக் கூடும். எந்த வங்கியாவது இதைப்பற்றி நினைக்கிறதா?

# ஐ.ஓ.பி. இருக்கிறதே

நீங்கள் சேமிக்கக்கூடிய தொகை சிறியதோ அல்லது பெரியதோ பரவாயில்லை. உங்களது பொறுப்புக் களையும், தேவைகளையும் மனதில் கொண்டு உங்களுக்காக ஐ.ஓ.பி.யில் பலவிதமான சேமிப்புத் திட்டங்கள் உருவாக்கப் பட்டுள்ளன.

வங்கிக்குச் செல்லாமல் வீட்டிலிருந்து கொண்டே உங்களால் இயன்ற சிறு தொகையினைக் கொண்டு சேமிக்க ஒரு திட்டம்.

இயன்றபொழுது கிடைக்கும் சிறு தொகைகளைக் கொண்டு சேமிக்க ஒரு சிறு சேமிப்புத் திட்டம்.

நிரந்தர வருவாய் உள்ளவர்கள் மாதந்தோறும் ஒரு குறிப்பிட்ட தொகையை சேமிக்க ஒரு திட்டம்.

முதலில் ஒரு சிறு தொகையினைக் கொண்டு ஆரம்பித்து வருடத்திற்கு வருடம் வருமானம் அதிகரிக்க அதிகரிக்க சேமிப்புத் தொகையும் அதிகரிக்க ஒரு திட்டம்.

முதலில் அதிக தொகையுடன் சேமிக்க ஆரம்பித்து வருடம் செல்லச் செல்ல குடும்ப பாரத்திற்கேற்ப குறைந்த தொகையினைக் கொண்டு சேமிக்க ஒரு திட்டம்.

இப்படி உங்களுடைய தேவைகளுக் கேற்ப பல்வேறு திட்டங்களைக் கொண்டுள்ளது ஐ.ஓ.பி.

**எங்களிடம் உள்ள சில சேமிப்புத் திட்டங்கள் :**

சிறு சேமிப்புத் திட்டம்
நிரந்தர வருவாய்த் திட்டம்
தொடர் சேமிப்புத் திட்டம்
கல்வி சேமிப்புத் திட்டம்
திருமண சேமிப்புத் திட்டம்



**இந்தியன் ஓவர்ஸீஸ் பாங்க்**

உங்கள் வளர்ச்சிக்கோர் உத்தம நண்பன்

IOB-55A-81-Tam

டிருக்கும் கூப்பிடு. நான் அதுக்குள்ளே இந்த அம்மாவுக்கு தேங்க்ஸ் சொல்லிட்டு வர்றேன்.''

போலீஸ்காரர்கள் டாக்டர் ஆனந்தையும் ஜம்புலவையும் அழைத்துச் சென்று விட்டார்கள். ப்ரியா படுக்கையில் எழுந்து உட்கார்ந்து கொண்டு நடந்து செல்லும் ஆனந்தையே பார்த்துக் கொண்டிருந்தாள். நீண்ட பெருமூச்சை விட்டாள். அவள் மனத்தில் வருத்தத்தின் நிழல் படர்ந்தது. முதல் முறையாக அவள் தன் மாணவி வீட்டில் டாக்டர் ஆனந்தைச்சந்தித்தது ஞாபகத்துக்கு வந்தது. அப்போது அவர் முகத்தில் கனிவு, கருணை நிறைந்திருந்தன. அவை இப்போது எங்கே? அன்று பார்த்த டாக்டர் ஆனந்த் எங்கே? மீண்டும் பெருமூச்சு விட்டாள்.

''கங்க்ராஜுலேஷன்ஸ் ப்ரியா... பவித்ரன் எங்கிட்ட எல்லாத்தையும் சொன்னார். வெளுத்து வாங்கிட்டியாமே... பேஷ் பேஷ். நீ இந்த அளவுக்குச் சமாளிப்பேன்னு நானே நெனைக்கலே போயேன். அந்த நாள்லே 'பாவம் அவ பொம்மனாட்டி என்ன பண்ணுவோ' அப்படீன்னு சொல்லுவா... நீ வந்து ஜமாய்ச்சுட்டியே பேஷ் பேஷ்....'' கோவிந்தராஜாச்சாரி மலை வாழைப் பழத்தை மென்று கொண்டே பேசினார். அவரும் ப்ரியாவும் மல்லிக்காலயா பங்களாவின் ஹாலில் சோபாவில் சந்தோஷமாக உட்கார்ந்து கொண்டிருந்தார்கள்.

''ஸார்! எல்லாத்துக்குமே நீங்கதான் ரெஸ்பான்ஸிபிள். நீங்க சொன்னதை நான் அப்படியே செஞ்சேன். அவ்வளவுதான்.''

**திருப்பத்தூர் பற்றி...**

ஆண் வாக்காளர்களைவிட பெண் வாக்காளர்கள் அதிகம்.

முதல் முதலாக அரிஜனங்களுக்கும், ஆதிவாசிகளுக்கும் தனியாக வாக்குச் சாவடிகள் அமைக்கப்பட உள்ளன. (அரசே பிரித்துவிடும் போலிருக்கிறதல்லவா!)

விரலில் நகத்தின் ஓரத்தில் மேல்புறம் மை இடுவதற்குப் பதிலாக விரலின் உட்புறத்தில் மையிடும்பழக்கம் முதல்முதலாகத் திருப்பத்தூரில் அமலாகவிருக்கிறது.

ஒரு மாநிலத்தின் ஆளுங்கட்சியும், பிரதான எதிர்க்கட்சியும் ஒரு வேட்பாளரை ஆதரிக்கும் விந்தையும் திருப்பத்தூரில்தான். தகவல்: - அ. தங்கமுத்து




''இல்லே ப்ரியா. உனக்குத்தான் கிரெடிட். தனியா இந்த பங்களாவிலே அந்த ரெண்டு கொலைகாரங்களையும் சமாளிக்கிறதுன்னா என்ன லேசா? இதே குமுதாவா இருந்தா சப்த நாடியும் ஒடுங்கிப்போய்ச் செத்திருப்பா. நீ இந்தக் காலத்துப் பொண்ணு. ஜமாய்ச்சுட்டே.'' தட்டிலிருந்த மற்றொரு வாழைப் பழத்தைக் கையில் எடுத்துக் கொண்டார்.

''ஸார் அதெல்லாம் சரி. முக்கியமான விஷயம் என்ன ஸார் ஆகும்?''

''என்னது பார்வதியோட எஸ்டேட்டா? ப்ரியா அதெல்லாம் உனக்குத்தான்... உயில்லே அந்த அம்மாவோட சொத்துப் பூரா ஒனக்கும் கிரிஷுக்கும்னு எழுதியிருக்கு. இப்ப கிரிஷ்னு ஒண்ணு இல்லேன்னு தெரிஞ்சு போச்சு. இப்ப எல்லா ஆஸ்தியும் ஒன்னுது. அந்த நாள்லே ஏகபோக மிராசுதார்னு சொல்லுவா. அதான் நீ! பூர்வ ஜென்மத்திலே பண்ண புண்ணியம் பணக்காரியாயிட்டே. கொடுக்கிற தெய்வம் கூரையைப் பிய்ச்சிண்டு கொடுக்கும்னு சொல்லுவா. அது உண்மையாயிடுத்து....''

''ஸார்... மாரேஜ் விஷயம்.....''

''நோ நோ ப்ரியா வில்லுல கலியாணத்துக்கும் ஆஸ்திக்கும் லிங்க் இல்லே. பார்வதி அம்மா உயில் எழுதறபோது நீ அவ புள்ளையக் கலியாணம் பண்ணிண்டாத்தான் ஆஸ்தி அப்படீன்னு கண்டிஷன் போட்டிருந்தா ப்ராப்ளம் வரும். அந்த மாதிரி ஒண்ணுமில்லியே. அதனாலே நீ அந்த அம்மாவோட ஆஸ்திக்கு வாரிசா இருக்கிறதுலே எந்தவிதமான காம்ளிக்கேஷனும் கிடையாது. நோ ப்ராப்ளம்ஸ்...டோண்ட் ஒர்ரி. அஃப்கோர்ஸ், பெட்டிஷனை நீ டிராஃப்ட் பண்ணணும்.''

''ரொம்ப தேங்க்ஸ் ஸார். நீங்க செஞ்ச உதவிக்கு என்னாலே முடிஞ்சதைத் திருப்பிச் செய்யறேன். நீங்க சொல்ல வேண்டியதுதான் பாக்கி.''

''நோ....நோ...ப்ரியா'' அவர் பலமாகச் சிரித்தார். ''நீ எனக்குக் கொடுக்க வேண்டியது என்னோட வக்கீல் ஃபீஸ்தான். வேறே ஒண்ணுமில்லே. நீ கடமைப் பட்டிருக்கிறது அந்த அம்மா பார்வதிக்கு...அப்புறம் நீ வந்து டாக்டர் ஆனந்துக்கு முக்கியமா தாங்க்ஸ் சொல்லணும் பெரிசா!.... அவன் இவ்வளவு சொத்தையும் அடிச்சிண்டு போகணும்னு ப்ளான் போட்டான். அதுக்கு ஒன்ன யூஸ் பண்றான். நீ நல்ல பொண்ணு. ஒன்னோட அதிர்ஷ்டம் ஒங்க அம்மா அப்பா செஞ்ச புண்ணியம் ஒனக்குச் சாதகமா முடிஞ்சுது. அதான் தலையெழுத்துன்னு நம்மவங்க சொல்லுவா... இப்பத்தான் அதெல்லாம் ஒண்ணும் கெடையாதுன்னு மேடை ஏறி உளர்றதுகள். பகவான் அன்னிக்கும் உண்டு. இன்னிக்கும் உண்டு. அதை நீயாவது புரிஞ்சுண்டு இருப்பேன்னு நெனைக்கிறேன். என்ன.....''

ப்ரியா பலமாகத் தலையை ஆட்டிக் கொண்டே இருந்தாள். அதே நேரத்தில் தட்டில் வாழைப் பழம் காலியாகிவிட்டது!

(முற்றும்)

# திருத்தலம் கண்டேன்!

## குறை தீர்க்கும் குணசீலம்





அருள்மிகு மகமாயி சமயபுரத்தே கொலு விற்றிருக்கும் மாரியம்மனைக் கண் குளிர சேவித்து விட்டுப் பின்பும் அருள் பசி யடங்காமல் மெய்யடியார்கள் ஸ்ரீமந் நாராயணனையும் வழிபட வேண்டும் என்று 'குணசீலம்' என்னும் திவ்விய க்ஷேத்திரத்திற்கு விரைந்தனர். நாமும் உடன் செல்வோம்!

அமைதியான சுற்றுப்புறம். அழகான சூழ்நிலை. அடக்கமே உருக் கொண்டு, அடியார்களின் பாதங்களைக் கழுவி வந்தனை செய்யுமாப்போல, அன்னை காவிரி தவழ்ந்து வருகிறாள்.

காவிரியில் நீராடி, ஜபம் முதலியனவற்றை முடித்துக் கொண்டு மேலே நடக்கிறோம். திருத்துழாய் மாலைகளின் நறுமணம் கமழ்கின்றது. துளசி மாலைகளையும், பெருமாளுக்கு உகந்த கற்கண்டையும் அருகிலுள்ள கடையில் பெற்றுக் கொண்டு திருக்கோயிலை நோக்கிச் செல்வோம். நில்லுங்கள்! ஏதோ பலமான சப்தம்கேட்கிறதே, யாரது? என்ன சொல்கிறார்கள் கேட்போமா?

''ஒரு டஜன் பத்து ரூவா, புச்சா எடுத்துக்கிட்டுப் போங்க, இத்திச்சா காக வேண்டாம்!''

பாவம், மாம்பழ வியாபாரி, மனநிலை இழந்தவர்.

''அடி போமடீ! என் பேச்சைக்கேட்டேன்மடீ! ஆத்தாளை விரட்டிவேண்டி! இப்ப? நீதாவேடி பெஞ்ச் மேல நிக்கறியேமடீ. இறங்கடீ, இறங்குமடீ!'' என்று கோடைப் பந்தல் காலை கைகளால் ஆட்டிக் கொண்டு ஒருவர்! — பாவம்! பள்ளி ஆசிரியரோ அவர்!

இன்னும் சற்றுத் தொலைவு போனோம். ஒரு நடுத்தர வயதுள்ள பெண்மணி சிரித்துக் கொண்டே எங்களை நோக்கி ஓடி வந்து கொண்டிருந்தார்.

''ஸார்! அக்டோபருக்கு இங்கிலீஷிலே ஸ்பெல்லிங் தெரியுமா?'' நான்தான் அகப்பட்டுக் கொண்டேன்! ஏனெனில் நானும் தலை முடி வெட்டிக் கொள்ளாமலும், முகமெங்கும் மீசை, தாடியுடனும் காட்சியளித்துக் கொண்டிருந்ததால் போலும்!

இதோ ஒரு வயதான பிராயத்து ஆண்மகன் அங்கப் பிரதட்சிணம் செய்துகொண்டிருக்கிறார். மனைவியும் மகளும் கூட உதவுகின்றனர்!

ஓரிடத்தில் ஒரு நிறை மாதக் கர்ப்பிணி தனது கணவருடனும் தாயாருடனும் காவிரியில் நீராடி, சொட்டச் சொட்ட ஆலயத்தில் நமஸ்கரித்து, பேச்சு மூச்சின்றி நமஸ்கரிக்கிறாள்.'' ஸ்ரீநிவாஸா! எனக்கு மடிப் பிச்சை மட்டும் போடு. வேறொன்றும் வேண்டாம்.''

இவ்வளவு குறைகளும் இன்னமும் மேலும் கொண்டுள்ள மெய்யன்பர்கள் திரள் திரளாகக் கூடும் 'குணசீலம்' என்னும் திவ்யத் திருத்தலம் திருச்சி மாவட்டத்தில் திருச்சியிலிருந்து சேலம் செல்லும் ரஸ்தாவில் பதினைந்து மைல் தூரத்திலிருக்கிறது.

'குணசீலம்' என்ற காரணப் பெயர் பூண்ட இத்திவ்விய மங்களத் தலம். திருமலை, திருப்பதி ஸ்ரீ திருவேங்கடமுடையானே இவ்விடத்தில் குணசீல மகரிஷிக்குப் பிரத்யட்சமாகத் தோன்றி, சகலவிதமான நோய்களையும் குணப்படுத்தித் தருவதாக வாக்களித்தார்.

அன்றும் இன்றும் என்றும் நாடி வரும் பக்தர்களின் உடல் நோய் மட்டுமின்றி மன நோயையும் குணப்படுத்தும் காருண்ய வள்ளலல்லவா குணசீலத்தில் கோயில் கொண்டிருக்கும் ஸ்ரீ ப்ரஸன்ன வேங்கடாசலபதி ஸ்வாமி!

காலையிலும் மாலையிலும் நீராடி, சாயரட்சை முதல் சந்நிதானத்திலேயே இருந்து பகலில் போலவே, ப்ரஸாதங்கள், தீர்த்தங்கள் பெற்றுக் கொண்டு. அர்த்தஜாமத் தரிசனத்துக்கு நிற்கின்றனர். கால் மண்டலம், அரை மண்டலம் என்ற விதிப்படி விரதம் காத்து, குணம் பெற்றுத் திரும்புகின்றனர். திருமலை வாசனுக்குப் பிரார்த்தனை செய்து கொண்டதை, குணசீலத்தில் நிறைவேற்றிக் கொள்ளலாம். ஆனால் குணசீலப் பெருமாளுக்கு வேண்டிக் கொள்வதை இங்கேயேதான் செலுத்திவிட வேண்டுமென்பதாக ஒரு விதி, நியதியுள்ளது!

குணசீலம் கோயில் மிகவும் புராதனமானது. இங்கு பெருமாளுக்கு மட்டும்தான் சந்நதி. தாயாருக்குச் சந்நிதி கிடையாது. பெருமாளினருகில் சென்று சேவிக்கிறோம்.

குணசீலம் கோயிலில் சமீபத்தில் ராஜகோபுரம் கட்டி மகா சம்ப்ரோக்ஷணம் சிறப்பாக நடந்திருக்கிறது. —பிராகாரத்தில் மாப்பிள்ளை அழைப்புப் போன்ற கல்யாண கார்



✖ நீராழி மண்டபம் - குணசீலம்



✖ குணசீலம் கோயில்

யங்களுக்கு இடம் கொடுக்கிறார்கள். சுற்றுப் புறத்தில் மிகக் குறைவான வீடுகள். யாத்ரீகர்கள் விடுதிகள், கல்யாண மண்டபம் போன்றனவும் இருக்கின்றது. எதிரே உள்ள நீராழி மண்டபம் மிகவும் கவர்ச்சி யாகவும் எழிலுடனும் இருக்கின்றது. சமீப காலத்தில் கோயிலுக்குள்ளாகவே தேவஸ்தான ஆபீஸ் ஏற்படுத்தி நல்ல முறையில் பணியாற்றி வருகின்றார்கள்.

முன்பு போக்குவரத்து மிகக் கஷ்டமாக இருந்தது. தற்போது திருச்சி — சேலம் போகும் பஸ்களும் 'மெயின் கார்டு கேட்' எனப்படுமிடத்திலிருந்து டவுன் பஸ்களும் கிடைக்கின்றன. உணவு விடுதிகள் சொற்பமே. ஆதலின் யாத்ரீகர்கள் தங்களுடன் உணவுப் பண்டங்கள் கொண்டு செல்வது நல்லது.

-எம். எஸ். பாலசுப்பிரமணியன்

# தேர்தல்

ஒரு தொண்டர் : எங்க வேட்பாளர், மற்ற வேட்பாளர்களைவிடப் பிரசாரம் செய்வதில் கெட்டிக்காரர்...''

மற்றொரு தொண்டர்: ''எப்படி சொல்றே...?''

ஒரு தொண்டர் : ''மற்ற வேட்பாளர்களெல்லாம், கால் நடையாகவோ, காரிலேயோ, சைக்கிளிலோ தொகுதியைச் சுற்றி வராங்கன்னு தெரிந்ததும், ''அங்கப் பிரதட்சணம்'' செய்து ஒவ்வொரு தெருவாய் ஓட்டுக் கேட்க ஆரம்பித்து விட்டார்...!''



ஒரு தொண்டர்: ''எங்க வேட்பாளர் ஒரு சரியான சந்தேகப் பேர்வழி...''

மற்றொரு தொண்டர்: ''எப்படி சொல்றே...?''

ஒரு தொண்டர்: ''ஜெயிச்சதா அறிவிப்பு வந்தபிறகும் நூறு வோட்டு ஜாஸ்தியா வந்திருக்கணுமேன்னு ரீகவுண்ட் கேட்கிறார்!''



வேட்பாளர்: ''பிள்ளையாரே... உனக்கு பத்து தேங்காய் உடைக்கிறேன்... எப்படியாவது டெபாஸிட்டாவது திரும்பிவர ஏற்பாடுசெய்...!''

•

ஒரு தொண்டர்: ''உங்க வேட்பாளர் வீட்டு வாசலில் கூட்டம் வந்தும் போவதுமாய் இருக்கே... ஏன்...?''

மற்றொரு தொண்டர் : டெபாஸிட் கூட கிடைக்கல்லியே... அதுக்காகத் தொகுதி மக்கள் வந்து துக்கம் விசாரிச்சுட்டுப் போறாங்க...''

- ராஜேஸ்வரி



வழிந்துவரும்,
கழுவிநிற்கும்
மென்மை...
ஒளிபடைக்கும் பிலிப்ஸ்



புதிய

# அர்ஜென்ட்டா-K

புத்தம்புதிது. கண்ணுக்கிதம்.
நிழலேயற்ற ஒளி. படைத்திடுவோர்
பிலிப்ஸ். ஆர்ஜென்ட்டா-K.
பால்வண்ணமான பல்பு.
இதற்கேது இணை !

**அளவான மின்னலகில் அதிக ஒளிவெள்ளம்**

**பிலிப்ஸ்**



HTB-PEI-6701

போட்டிக் கதை 12



# மணமுள்ள காகிதப் பூக்கள்

எஸ். சங்கரநாராயணன்

இந்த அர்த்த ராத்திரியில் விசாலிவிழித்துக்கொண்டாள்.

என்ன காரணம் என்பது தெரியவில்லை. எப்படி விழிப்புத் தட்டியது என்பதும் புரியவில்லை.

சில ராத்திரிகள் இப்படித்தான். எங்கோ ஒரு மூலையில் ஒரு நாய் சன்னமாய்க் குரைத்திருக்கும். ஒரு கழுதை ஓடியிருக்கும். ஒரு பறவை படபடத்திருக்கும். சப்தம் சரியாகக் கூடக் கேட்காத தூரத்தில்தான் இருக்கிறேம் என்றாலும் 'திடுக்'கென்று ஓர் எச்சரிக்கை உணர்வு மூளைக்குள் பாய....

விழிப்புத் தட்டிவிடும்.

விழிப்புத் தட்டிவிட்டது.

ஒரு க்ஷணம் என்ன ஏது என்றே தெளியவில்லை. மலங்க மலங்க முழித்தாள். ஒரு ராட்சஸப் போர்வையாய் இருட்டு உலகைப் போர்த்தியிருந்தது. திடீரென்று முழிப்புத் தட்டினதில் இருள் கண்ணைக் கட்டிவிட்டது. ஒரு பொருள் தெரியவில்லை.

ஆயிற்று. இன்று தூக்கம் அவ்வளவுதான். மூளை துடைத்து விட்ட மாதிரி சுத்தமாய் விழித்து விட்டது. கண்ணுங்கூட சிவப்புக் கட்டிக்கொண்டு இருக்காமல், எரிச்சல் எடுக்காமல் 'பளிச்'சென்று ஆகிவிட்டது. இனி உறங்குவது அசாத்தியம்.

விசாலி புரண்டு படுத்தாள்.

'மனோகர் டாக்கீஸில்' இன்னும் சினிமா விட்டிருக்கவில்லை. எம்ஜியாரும் யாரோ ஒருவனும் ஆக்ரோஷமாய் மோதிக் கொள்வது கேட்டது. 'ணங் ணங்'கென்று கத்திகள் மோதின.

விசாலி சினிமாவுக்குப் போவதில்லை. போக இஷ்டமில்லை என்றில்லை. எம்ஜியார் கஷ்டப்பட்டால், அடி வாங்கினால் 'ஓ!'வென்று குடி முழுகின மாதிரி அங்கேயே கண்ணீர் விடும் ஜாதிதான் அவளும்.

ஆனாலும் இப்போது சினிமாவை ஒதுக்கி விட்டாள். அண்ணாவிடம் கேட்கப் பயம். அண்ணாகூட நல்லவன்தான். மன்னிதான் நெருப்பை வீசுவாள்.

''தாலியறுத்தவளே!''என்று தான் அவள் பற்றிய பேச்சைத் தொடங்குவாள் மன்னி. பெரிய குரல் அவளுக்கு. மைக்கே தேவையில்லாத குரல். விசாலியை நோக்கி நக்கலாய் வார்த்தைகள் தெறிக்கும்போது அந்தச் சரீரம் இன்னும் முரடாய் இன்னும் பெரிசாய்த் தெரியும்.

மன்னி ஒரு தனி டைப். பிறத்தியாரை இம்சித்து இன்பப்படும் பிரகிருதி. வாஸ்தவத்தில் ஒரு உண்மையான சந்தோஷம் என்பது இன்னொரு நியாயமான சந்தோஷத்தின் அடிப்படையில் பிறப்பதுதான் என்று புரியாத ஜாதி.

'சட்'டென்று கோபம் வந்துவிடும் அவளுக்கு. அண்ணாவிடமோ குழந்தை — ஓர் ஆண், ஒரு பெண் — களிடமோ, விசாலியிடமோ எங்கே ஆரம்பித்தாலும் முடிவதென்னவோ விசாலியிடம்தான்.

விசாலி வாயைத் திறக்கவே மாட்டாள். மன்னியின் ஆத்திரம் கூடிப்போகும் என்பதல்ல காரணம். அவள் சுபாவமே அப்படி. சட்டென்று யாரையும் வார்த்தையால் தூக்கிப் போடத் தெரியாது. க்ஷணமாய் ஒரு தூசிப் பார்வையில் அடுத்தவரை அவமானப் படுத்த வராது. இப்படியெல்லாம் அவளுக்கு ஏனோ தோன்றுவதே இல்லை.

அந்த வீட்டில் அவள் ஸ்திதி ஒரு வேலைக்காரியினும் கீழ்த்தரமானது. பச்சையாய்ச் சொன்னால் அவள் ஒரு நாய். அடிமை நாய். நன்றியுள்ள நாய். பிராண விசுவாசம் காட்டும் பிராணி. வீசிப் போடும் ஒரு துண்டுப் புரைக்கும் ஆயுள் பரியந்தம் வாலைக் குழைத்துக் கொண்டு பின்னால் ஓடிவருகிற ஜந்து.





கோபத்தில் மன்னி அவளை விரல் சிவக்க அடித்திருக்கிறாள். காதில் ரெண்டு மூணு முறை எதிரொலிக்கிற மாதிரி 'பளா'ரென்று அறைந்திருக்கிறாள். முஷ்டியால் ஊமைக் காயப்படுத்தியிருக்கிறாள்.

அண்ணா ஒரு ஆண்பிள்ளையே இல்லை. மீசை வைத்துக் கொள்வதில்லை அவன். நடை கூட லேசாய்ப் பொம்பளைச் சாயலில்தான் இருக்கும். வீட்டில் இத்தனை ரகளை நடக்கும். தனக்குச் சம்பந்தமே இல்லாத மாதிரி மரமாய் நிற்பான். சில சமயங்களில் அங்கு நிற்கிற தூண்களில் ஒரு தூணாய் அவனும் மாறிவிட்டானோ என்றுகூடத் தோன்றும்.

மன்னிக்குப் பூ வைத்துக் கொள்ள முடிகிறது. தைரியமாய் மனசில் உள்ளதைச் சொல்லிச் சிரிக்க முடிகிறது. பரபரவென்று காலையில் எழுந்து வீட்டு வேலைகளைக் கவனிப்பதில் விசாலியை இதெல்லாம் பாதிப்பதில்லை.

ராகவனுக்கு விசாலி இரண்டாந் தாரம் தான். அது குறித்துத் துளி வருத்தமில்லை அவனுக்கு. வந்த நல்ல ஜாதகங்களை யெல்லாம் பொருத்தமில்லை, நிறைய எதிர்பார்க்கிறார்கள், பையன் கறுப்பு, பிள்ளையோட அக்கா ஓடிப்போயிட்டாளாமே?... மன்னி எதையாவது சொல்லித் தட்டிவிட்டு விட்டாள்.

மூணு வருஷ அலைக்கழிப்பில் விசாலி சோர்ந்து போனாள். பிரமாதமான அழகி யில்லைதான் என்றாலும் விசாலி மட்டுஇல்லை. பளிச்சென்று வைக்கோல் போட்டுத் தேய்த்த குத்து விளக்கு மாதிரி...

ராகவன் ஆர்மியில் 'நாய்க்'. வண்டல் மேடு தெற்குத் தெருவில்தான் அவன் அம்மா குடியிருந்தாள். ராமலட்சுமிப் பாட்டி என்பதை விட, யானைக்கால் பாட்டி என்றால் எல்லாருக்கும் சட்டென்று புரியும்.

முதல் சம்சாரம் செத்துப் போனதும் ராகவன் இன்னொரு கல்யாணத்துக்குப் பிரியப்படவில்லை. வருஷத்துக்கொரு முறை பதினைந்து இருபது நாள் என வந்து தங்கிவிட்டுப் போவான் அவன்.

பத்து வருஷம் முன்பு ஒரு முறை வந்த போது குளக்கரைப் பக்கம் சாராயங் குடிக்கப் போனான். விசாலி கோவிலில் மஹிஷாசுர மர்த்தினி கதை கேட்கப்போனாள். ஏனோ அவன் அவளிடம் சலனப்பட்டு...

மெதுவாய் ஒரு நாள் அண்ணாவை அணுகி விஷயம் சொன்னான். மன்னி வழக்கம் போலக் கத்தினாள். ''சனியன், பீடை, ரோட்ல அவனைப் பார்த்துக் கண்ணடிச்சண்டு நின்னியா? ஒடம்பு அப்படிக் கேக்குதோ?''

அவள் பதற்றப்படவில்லை. இந்நேரம் மன்னி கத்தாமல் இருந்தால் அதுதான் ஆச்சரியமாய் இருந்திருக்கும்.

கல்யாணம் முடிந்து, தெற்குத் தெரு புகுந்தாள் விசாலி!

ராகவன் நல்லவன். முரடன், குடிகாரன், மாமிசம் உண்ணும் பிராமணன்... என்றாலும் நல்லவன். இங்கிதம் தெரிந்தவன்.

இரவுகளில் அவன் வேகத்தில் மூச்சுத் திணறிப் போவாள் விசாலி.

லீவு இன்னும் ஒரு வாரம் இருக்கும்போது அவன் அம்மா செத்துப் போனாள்.

ராகவன் கடன் வாங்கினான். தந்திகள், டிரங்கால்கள், மாலைகள், வெட்டியான், புரோகிதர்... துரிதமான ஏற்பாடுகள்.

''துக்கிரி! இவ புகுந்த வீடு எப்படி உருப்படும்?'' என்றபடியே மன்னி வந்தாள்.

அந்த லீவு முடிந்து ஊருக்குத் திரும்பும் போது ராகவன் தெற்குத் தெரு வீட்டைக் காலி செய்து விட்டான்.

விசாலி மீண்டும் நாயானாள். அடிமை நாய். நன்றியும் விசுவாசமுள்ள நாய். ஒரு துண்டுப் புரைக்கு ஆயுசு பரியந்தம் வாலைக் குழைத்துக் கொண்டு பின்னால் ஓடிவருகிற ஜீவன்.

சினிமா விட்டு விட்டார்கள்.

மீண்டும் நிசப்த ஆதிக்கம். ஒரு துணை இழந்துவிட்டமாதிரி விசாலி உணர்ந்தாள். வாழ்க்கைத் துணையே போய்விட்ட பிறகு...

ஊருக்குப் போன பின் ராகவன் அதிகம் கடிதம் எழுதவில்லை. அவன் சுபாவமே அப்படி. அண்ணா பேருக்குப் பணம் அனுப்பும்போது கூடவே நாலு வரி அவளுக்கு எழுதுவான். சில சமயம் விலாசம் மாறினாலும் லெட்டர் வரும். '56 ஏ.பி.ஓ.விலிருந்து 'தேஜ்ரான்' மாறியுள்ளேன். மூணு மாசம் இங்கேதான்' என்று எழுதுவான்.

விசாலிக்கு இந்தக் கல்யாணம் வாழ்வில் ஒரு திருப்பு முனையாக அமையவில்லை. பொம்மைக் கல்யாணம் மாதிரி பேருக்கு ஒரு கல்யாணம். கணவன் என்று உறவு. மாசம் .பணம் அனுப்புவதுடன் அவன் உறவு முடிந்தது.

எனக்கும் விவாகமாகி விட்டது. இந்தக் காகிதப் பூவுக்கும் போலியாய் ஒரு மணம் கிடைத்து விட்டது. சமுதாயத்தில் சில போலிகள், சில வேஷங்கள் அவசியமாகி விட்டன.

மற்றவர்களைப் பொறுத்த மட்டில் மணமுள்ள இந்தப் புஷ்பம் தன்னியல்பில் வெறும் காகிதப் பூ!... சிரிக்க வேண்டும் போலிருந்தது. அவளுக்கு.

இன்று தூக்கம் அவ்வளவுதான். மனசு நிலையில்லாமல் அலையத் துவங்கிவிட்டது.

இப்படி யொரு ராத்திரியில்தான் தந்தி வந்தது. அவளே அந்த இடியை வாங்கினாள். யாரோ ஒரு ராணுவ அதிகாரி தந்தி கொடுத்திருந்தான். 'ராகவன் மரணம். உடலைத் தேடிக் கொண்டிருக்கிறோம். அனுதாபங்கள்!.'

விசாலி பிரித்து வாசித்தாள். திரும்பத் திரும்ப வாசித்தாள். பிரமை பிடித்த மாதிரி நின்றாள். அழுகை வரவில்லை. அழ வேண்டும் போல் ஆசையாய் இருந்தது. அழவில்லை. அழத் தெரியவில்லை. அழுகை வரவில்லை.

'பட்'டென்று அடுத்த அறையில் விளக்கு போடப்பட்டது. அண்ணா எழுந்து வந்தான். பின்னால் மன்னி. ரவிக்கையைக் கீழே இழுத்து விட்டுக் கொண்டாள்.

அழுகை. அழுகை. அழுகை.

—உண்மையிலேயே நான்ஒரு துக்கிரிதானோ? அதிர்ஷ்டக் கட்டைதானோ?

---

மனைவி: போயும் போயும் ஒரு பிச்சைக்காரனை வீட்டுக்குள்ளே கூட்டிவந்து உட்கார வச்சி வடை பாயசத்தோடு இலையிலே சாப்பாடு போடறீங்களே இது உங்களுக்கே நல்லா இருக்கா?

கணவன்: பேசாம இரு! அவருக்கு லாட்டரிச் சீட்டில் ஒரு லட்ச ரூபா பரிசு விழுந்திருக்கு!

-கடலூர் கன்னியப்பன்



பின் ஏன் எனக்கென்று மாத்திரம் மாற்றி மாற்றி இத்தனை சோதனை? சதா கஷ்டமே ஜீவிதம் என்கிற மாதிரி எனக்கு மட்டும் ஏன் இப்படி? நான் தொட்ட எதுவும் துலங்குவதில்லையே அது ஏன்?

விசாலிக்கு வாழப் பிடிக்கவில்லைதான். ஆனால் செத்துப் போகவும் இஷ்டமில்லை.

இனி தூங்க முடியாது. அப்படியே கொல்லைப்புறம் போய் நாலு வாளி இறைத்துத் தலையில் கொட்டிக் கொண்டு சமையல் வேலையை ஆரம்பித்து விடவேண்டியதுதான்.

கொல்லைப்புறம் போய் நீரிறைத்தாள். அந்த நிசப்தத்தில் ஜகடை மாத்திரம்உருண்டு அசிங்கமாய்ச் சப்தித்தது. முதல் வாளித் தண்ணீரைக் கொட்டிக் கொண்டபோது சட்டென்று உடம்பெல்லாம் ஒரு குளிர்ச்சி பரவி, ஒரு சிலிர்ப்பான சுகத்தில் உடல் வெட்டிற்று.

வேறு உடை மாற்றிக் கொண்டு கண்ணாடி பார்த்து விபூதி இட்டுக்....

வாசலில் சத்தம். யாரோ கூப்பிட்டார்கள். ஆம்பிளைக் குரல். ஸ்பஷ்டமாய் ''விசாலி! விசாலி!'' என்று கூப்பிட்டது.

இவளுக்குத் தூக்கிவாரிப் போட்டது.

மன்னியும் எழுந்து விட்டாள். இவள் வாசலுக்குப் போனபோது அவளும் பின்னால் வந்தாள்.

வாசலில் யாரோ ரொம்ப ஒல்லியான அவன், ரொம்ப விகாரமான முகம். வலப்புறம் முழுவதும் தீப்பட்டுக் கருகியிருந்தது. உடம்பில் துணிகளெல்லாம் அங்கங்கே கிழிந்து... அவனைப் பார்க்கவே என்னவோ செய்தது அவளுக்கு.

''யார் நீங்க? என்ன வேணும்?'' என்று கேட்டாள் விசாலி.

அவன் 'ஓ'வென்று அழுதான். ''என்ன விசாலி. இப்படிக் கேட்டுட்டே... நான்... நான்தான் ராகவன்!'' அவன் திரும்ப அழத் துவங்கினான்.

அவள் திகைத்துப் போனாள். நெருப்பைத் தொட்ட மாதிரி, மின்சாரத்தைத் தொட்ட மாதிரி ஓர் உணர்வு. ரொம்ப உயரத்திலிருந்து விழுந்துநொறுங்கிப் போன மாதிரி இருந்தது.

மன்னி உற்சாகமாய் உள்ளே ஓடினாள். வெறி பிடித்தவள் போல் சிரித்தாள். திரும்பி வந்தபோது அவள் கையில் குங்குமச் சிமிழ். கொண்டு வந்து விசாலியின் நெற்றியில் வைத்தாள். பின் அவளைக் கட்டிக் கொண்டு நிறைய அழுதாள். திடீரென்று நிறுத்தி, ''விசாலி, எல்லாம் விடிஞ்சுடுத்து. இனி நீ அழப்படாது. ஒரு குறையுமில்லாமல் சிரிச்சுண்டே யிருக்கணும்... என்ன?'' என்றாள் பரிவுடன் அவள் கண்ணைத் துடைத்து விட்டபடியே.

மன்னி....மன்னி மாறிவிட்டாள். ஒரு தாயின் ஸ்தானத்துக்கு'சட்'டென்றுஉயர்ந்து விட்டாள். என்னதான் மோசமான குணவதியாக இருந்தாலும் தன்னைச் சார்ந்த ஒரு பெண்ணுக்குப் பொட்டும் பூவும் திரும்பக் கிடைப்பது பெரிய விஷயம். மகா சந்தோஷமான விஷயம். அதற்குச் சந்தோஷிக்காத உள்ளமே இருக்க முடியாது.

மன்னியின் அந்த மாறுதல் அந்நேரம் அவளுக்குத் தேவையாய் இருந்தது. மன்னியைக்

கட்டிக்கொண்டு மனப் பாரமெல்லாம் கரைய அழுதாள்.

''மாப்ளே! கொஞ்சம் அப்படியே நில்லுங்கோ. ஆரத்தி எடுத்துடறேன்.''

மன்னி கரைத்துக் கொண்டு வந்தாள். ''அடி சுமங்கலி! நீயும் கூடப் பிடி! ரெண்டு பேருமா ஆரத்தி எடுக்கலாம்.'' என்று மனசு நிறையக் கூப்பிட்டாள்.

ராகவன் உள்ளே வந்தான். அண்ணாவின் வேஷ்டியும், ஷர்ட்டையும் மாற்றிக் கொண்டான். கொல்லைப்புறம் போய் முகம் கழுவி வந்தான். காப்பியை ஆற்றிக் கொண்டிருந்த போது, அண்ணா விஷயம் கேட்டு எழுந்து வந்து அவனைக் கட்டிக் கொண்டான்.

விசாலி நிறையச் சிரித்தாள். காணாது. இன்னும் சிரிக்க வேண்டும் போலிருந்தது.

எல்லையில் ராகவனைப் போட்டிருந்தார்களாம். பாகிஸ்தானியருடன் ஒரு கைகலப்பு.




குண்டுகள் இங்கும் அங்குமாய்ப் பறந்த போது ராகவனுக்கு அடி. ஓட முடியவில்லை. தோளில் ஒரு குண்டு சதையைப் பெயர்த்து மரத்தில் வீசிற்று. வலி, உசிர்போகிற இம்சை.

அடக்கினான். பல்லைக் கடித்துக் கொண்டு ஓடினான். பின்னால் ஒரு பாகிஸ்தானி உருதுவில் கத்திக் கொண்டே விரட்டினான். நினைவு மங்கிக் கொண்டே வர ஓடினான். கனமான பூட்ஸ். கால் வலித்தது.

கூட ஓடிவந்த ராம்லால் மூன்று குண்டு வாங்கினான். வயிற்றில், மார்பில், கடைசியாகக் காலில். இரண்டு குட்டிக்கரணம் போட்டு ராம்லால் இரத்தம் வழியச் செத்துப் போனான்.

காட்டுக்குள் விழுந்து, ஒரு மலை ஜாதியினர் பார்வையில் பட்டு, ஒரு வாரமாய் மயங்கி, குண்டெடுத்து பச்சிலை கட்டப்பட்டு, இரண்டு மாசமாயிற்று உடம்பு தேற. குண்டு கன்னச் சதையையும் நிறையப் பிய்த்திருந்தது. தேறி திரும்புவதற்குள் இங்கு விசாலிக்குத் தந்தி வந்து விட்டது.

ராகவன் கதை சொன்னான். நம்பவும் முடியவில்லை, நம்பாமலும் முடியவில்லை என்கிற மாதிரி ஒரு கதை. அண்ணா அடிக்கடி கண்ணைத் துடைத்துக் கொண்டான். குழந்தைகள் பயந்து நின்றன.

''பாயசம் பண்ணணும் விசாலி. வடை கூடத் தட்டிப்பிடலாம்.''

மன்னி ஓயாமல் பேசினாள். பரபரத்தாள். ஸ்டோர் ரூமில் ஒரு கால், சமையலறையில் ஒரு கால். நிறைய அலைந்தாள். சமையல் விசாலிதான். வழக்கமில்லாத வழக்கமாக நிறைய ஒத்தாசை செய்தாள் மன்னி.

விசாலி பூ வைத்துக் கொண்டாள். பெரிசாய்ப் பொட்டிட்டுக் கொண்டாள். ராகவன் திரும்ப அவள் கழுத்தில் ஒரு மஞ்சள் கயிறு கட்டினான்.

ஸ்வாமி விளக்கேற்றி நமஸ்கரித்தாள். சமையல் செய்தபடியே வாய் நிறைய ஸ்லோகம் சொன்னாள்.

நிறையப் பேர் வந்து விசாரித்தார்கள். பரபரவென்று ஊர் முழுக்க விசாலியின் அதிர்ஷ்டம் பற்றின பேச்சுத்தான். ஒரு புரோகிதர் வந்து ஏதோ 'சாந்தி' பண்ணணும் என்றார்.

திடீரென்று வீடே கலகலப்பான மாதிரி இருந்தது விசாலிக்கு.

''வேணா, குளிச்சிடறேனா?'' விசாலி புருஷனைக் கேட்டாள். அவன் அண்ணாவைப் பார்க்க, அண்ணா, ''நான் ஆற்றிலே போய்க் குளிக்கிறது'' என்றான்.

இருவரும் கிளம்பிப் போனார்கள்.

பாதிச் சமையலில் விசாலி அடிக்கடி அழைக்கப்பட்டாள். ஊர்பூரா வந்தது... பெண் பெண்ணாய் வந்தார்கள். அன்போடு விசாரித்தார்கள். விசாலிக்கு மகிழ்ச்சியில் மூச்சுத் திணறியது. இத்தனை பிரியத்தையும் இவர்கள் இதுநாள்வரை எங்கே ஒளித்து வைத்திருந்தார்கள் என்று திகைப்பாயிற்று.

முந்திரிப் பருப்பு மணக்கப் பாயசம். சட்டியில் வடை தட்டிப் போட்டதும் 'சொய்'யென்ற சத்தமில் சந்தோஷமாய்க் குதித்தது.

சமையல் பூராவும் முடிந்தது. முரளி வந்து இப்பவே பாயசம் கொடு என்று அடம் பிடித்தான். நைவேத்தியம் முடியும்வரை பொறுமை இல்லை.

மன்னி கர்வமாய் வளைய வந்த மாதிரி இருந்தது. அடிக்கடி அவளைப் பார்த்துச் சிரித்தாள். வருகிறவர்களுக்கெல்லாம் ''எங்க விசாலி மாதிரி அதிர்ஷ்டக்காரி உண்டோ?'' என்று குங்குமம் கொடுத்தாள்.

''சமையல் பூரா முடிஞ்சுது மன்னி. நான் போய் ரெண்டு இலை நறுக்கிண்டு வரட்டுமா?'' என்றபடியே கொல்லைப்புறம் போனாள் விசாலி.

திரும்பி வந்தபோது—

நாலு பேர் ராகவனைத் தூக்கி வந்தார்கள். அண்ணா பெரிசாய் அவனைக் கட்டிக் கொண்டு கதறினான். ''ஐயோ, அந்தப் பக்கம் சுழி இருக்கு போகாதீங்கோன்னு கத்தினேன். அவர் கேக்கவே இல்லையே...'' அண்ணா மீண்டும் மீண்டும் கதறி அழுதான்.

# உங்களை வரவேற்கிறது கனரா வங்கி! உகந்த பல திட்டங்களைக் காணீர் அங்கே!!

குடும்பத்தில் குழந்தைகளின் கல்வி, வேலை, திருமணம் முதலிய பல அன்றாடப் பிரச்சினைகள் உங்களுக்கு உண்டு மற்றும், வீடு வாசல் என்ற ஆசைகளும் இருக்கும். 'இடுக்கண் களையும் நட்பு' போல உங்களுடைய இத்தேவைகளை பூர்த்தி செய்ய, அணுகுவீர் **கனரா வங்கியை**.

குழந்தைகளின் உயர் கல்விக்கு உத்திரவாதம் அளிப்பது எங்கள் **'வித்யா நிதி'** திட்டம்; நடுத்தர வர்க்கத்தினர் எளிதில் சேமிக்க, எங்கள் **ரெகரிங் டெபாசிட்**; உங்கள் சேமிப்பின் வட்டியில் ஓய்வு காலத்தை நிம்மதியாய்க் கழிக்க உதவுவது எங்கள் **நிரந்தரத் திட்டம்**.....

இப்படி வகைவகையாய் உங்களுக்காகவே ஏற்படுத்தப் பட்டுள்ள எங்கள் பல்வேறு திட்டங்கள்; காமதேனு; வைப்பு நிதித்திட்டம்; சேவிங்ஸ் பாங்க் முதலியன.

உங்கள் வீட்டிற்கு அருகாமையில் எங்கள் கிளை ஒன்று உண்டு. அங்கு எங்கள் கிளை மேலாளரைச் சந்தித்து இன்றே உங்களுக்குத் தகுந்த சேமிப்புக் கணக்கில் சேருங்கள்.

இச் சின்னத்தின் மூலம் எங்கள் நட்புக் கரங்களை நீட்டி வரவேற்கிறோம்

# கனரா பாங்க்

(தேசியமாக்கப்பட்ட பாங்க்)
நாடெங்கிலும் 1,300 க்கும் மேற்பட்ட கிளைகள் உள்ளன.




maa (S) CB 14 Tam c 81



















# வரவேற்கிறோம் வாழ்த்துகிறோம்!

இங்கிலாந்து குழு!

1. ஃபிளெட்ச்சர் (காப்டன்)
2. ஜான் எம்பூரி
3. பால் அல்லாட்
4. மைக் காட்டிங்
5. ஐயான் போதம்
6. டெரிக் அண்டர்வுட்
7. கிரகாம் டில்லே





8



9



16



11



12



13



14



15



16



17

8. ஆர். சுப்பாராவ் (மானேஜர்)
9. கிரிஸ் டவாரே
10. பாப் டெய்லர்
11. ஜியாப் குக்
12. ஜான் லீவர்
13. டேவிட் கோவர்
14. ஜாக் ரிச்சர்ட்ஸ்
15. கிரஹாம் கூச்
16. பாப் வில்லிஸ்
17. ஜியாஃப் பாய்காட்.

புகைப்படங்கள் : பிரிட்டிஷ் தகவல் நிலையம்

# இதற்குத்தானா...?

## 'பெமினா'



ஆழ்வார் கவலை தோய்ந்த முகத்துடன் வக்கீலை உற்றுப் பார்த்தான்.

''வக்கீல் சார்... இந்த வழக்கிலே....''

வக்கீல் அவனை இடைமறித்தார். ''ஏன் மிஸ்டர் ஆழ்வார்! இது ஒரு கேஸா? ஊதிட மாட்டேனா ஊதி! அது சரி, என் மேலே நம்பிக்கை இல்லையா உங்களுக்கு?''

''அதுக்கில்லே வக்கீல் சார்....'' — அவன் தயங்கினான்.

''பின்னே எதுக்காக இப்படி ஃபீல் பண்றீர்? ஒரு விஷயம் தெரியுமோ உமக்கு? விபசாரத்துலே ஈடுபட்டதுக்காக ஒரு ஆணையும் பெண்ணையும் அரெஸ்ட்பண்ணினா, ஆணை விட்டுட்டுப் பெண்ணை மட்டுமே தண்டிக்கிற நாடு இது... இங்கே ஒரு பொண்ணைக் கற்பழிச்சுட்டதுக்காக ரொம்பப் பயப்படவேண்டிய அவசியமே இல்லே.... இதுவே ஒரு முஸ்லீம் நாடா இருந்தா சமாசாரமே வேறே! இது ஜனநாயக நாடோல்லியோ? எதுக்குக் கவலைப்படறேள்?''

''உண்மைதான்! இருந்தாலும் வக்கீல் ஸார்... அதென்னவோ வேலை கேட்டு வந்தா... படிச்ச பொண்ணு, அழகா இருந்தா'...இண்டர்வியூவை வீட்டிலே வெச்சிக்கலாம்னு சொல்லி வரச் சொன்னேன்... வந்தாள்! எப்படியோ ஒரு வழியா நினைச்சதைச் சாதிச்சுக்கிட்டேன். ஆனா இந்த மாதிரி போலீஸ்லே கம்ப்ளைண்ட் கொடுப்பான்னு நெனைக்கல்லே! எல்லாம் அந்த மாதர் சங்கத் தலைவி கொடுத்த தைரியம்... நம்ம நாட்டுப் பெண்ணுங்களுக்குப் புத்தியில்லே! இதையெல்லாம் சாதாரணமா எடுத்துக்க வேண்டாமா?'' அவன் அலுத்துக் கொண்டான்.

''என்ன மிஸ்டர் ஆழ்வார்! கடைசியிலே என் மடியிலேயே கையை வைக்கிறீரே? எல்லாருமே இதைச் சாதாரணமா எடுத்துக்கிட்டா அப்புறம் என்னை மாதிரி வக்கீலுக்குப் பொழைப்பு நடக்கிறது எப்படி?''

இருவரும் வாய் விட்டுச் சிரித்துக் கொண்டனர்.

வடிவுக்கு மனம் நிலைகொள்ளாமல் தவித்தது. இரத்த நாளங்கள் சூடேறி உடல் வியர்த்துக் கொட்டியது. இதயத்தில் சிந்துகின்ற இரத்தக் கசிவில் கண்கள் சிவப்பேறிக் கண்ணீர் அருவியாக வழிந்தது.

வடிவு குமுறிக் குமுறி அழுதாள்.

எதிரே கிடந்த தினப் பத்திரிகைகள், பெண் இனத்துக்குத் தங்களால் ஆன சேவையைச் செய்து கொண்டிருந்தன; கொட்டை எழுத்துக்களில்!

''என்னை நிர்வாணமாக்கிக் கற்பழித்தார்—அழகி வாக்குமூலம்.''

''இளம் பெண்ணைக் கதறக் கதறக் கற்பழித்ததாக முதியவர் கைது!''

'என்னைக் கெடுத்து விட்டானே! — இளம் பெண் சோகம்!'

—இப்படித் துவங்கிய தலைப்புகளுக்குக் கீழ் கொடுக்கப்பட்டிருந்த விவரங்கள் படிப்பவர்கள் மனத்தில் அனுதாபத்தை உண்டாக்கியிருக்குமோ என்னவோ, பரிகாசத்தை நிச்சயம் உண்டுபண்ணி யிருக்கும்.

'இதற்குத்தானா... இதற்குத்தானா நாம் போலீஸில் புகார் கொடுத்தது?...'

அவள் இதயம் குமுறி அழுதாள்.

''வடிவு....''

குரல் கேட்டு அவள் நிமிர்ந்தாள். எதிரே அவளை வளர்த்து ஆளாக்கிய மாதர் சங்கத் தலைவி அகிலா நின்று கொண்டிருந்தாள்.

''அம்மா....'' அவள் கேவினாள்.

''வடிவு அழாதேம்மா... இப்படி அழறதாலே யாருக்கு என்ன லாபம்?''

அவள் வெடித்தாள்.

''கடைசியா நீங்களும், அந்த சப்-இன்ஸ்பெக்டருமா என்னை வற்புறுத்தி அங்கே நடந்ததை யெல்லாம் பச்சையாச் சொல்ல வெச்சு ஒரு ஸ்டேட்மெண்ட் தயாராக்கி என்னைக் கையெழுத்துப் போட வெச்சீங்க... இதை அப்பவே மறைச்சிருந்தா குறைந்த பட்சம் கௌரவமாவது மிஞ்சியிருக்கும். இப்ப?.... இப்ப எல்லார் முன்னாலேயும் அவமானத்தால் தலை குனிஞ்சி நிக்கிறமாதிரி பண்ணிட்டியேம்மா....'' அவள் அழுதாள்.

''இதைப் பாரு வடிவு...நீ சொல்றது ஒரு வகையிலே சரியாப் படுது...ஆனா உன்னை மாதிரியே எல்லோருமா நினைக்க ஆரம்பிச்சுட்டா அப்புறம், இந்த மாதிரி கயவனுங்களுக்குத் துளிர் விட்டுப் போகாதா? பார்க்கிற பொண்ணை யெல்லாம் பலாத்காரம் பண்ண மாட்டானுங்களா?

''அழாதே வடிவு... அழாதே ப்ளீஸ்....'' அந்த அம்மாள் அவளின் தலையைக் கோதி



விட்டாள். வடிவு கண்களைத் துடைத்துக் கொண்டாள்.

**சா**ட்சிக் கூண்டில் ஏறிய வடிவு அவமானத்தால் உடல் குறுகி நின்றாள்.

பிராஸிக்யூஷன் தரப்பில் அவள் கொடுத்த ஸ்டேட்மெண்ட் அடிப்படையில் குற்றப் பத்திரிகை வாசிக்கப்பட்டது. அனைவரது பார்வையும் தன்மேல் மொய்ப்பதை அவள் உணர்ந்தாள்.

''கடவுளே! என்ன கொடுமை இது?...''

அரசுத் தரப்பு வக்கீலின் விசாரணைக்குப் பிறகு எதிர்த் தரப்பு வக்கீல் அவளைக் குறுக்கு விசாரணைசெய்யத் தொண்டையைக் கனைத்துக் கொண்டு எழுந்தார்.

''ஏம்மா... உன் பேரு என்ன?''

''வடிவு...''

''அப்பா அம்மா இருக்காங்களா?''

''இல்லே! அவங்க செத்துப் போய் இருபது வருஷங்கள் ஆகியிருக்கும்...''

''ஓஹோ! அப்ப உன்னை வளர்த்தது?''

''மாதர் சங்கத் தலைவியா இருக்கிற அகிலாம்மாதான் என்னை வளர்த்துப் படிக்க வெச்சு ஆளாக்கினாங்க...''

''கல்யாணம் ஆகிவிட்டதா?''

''இல்லே...''

''குழந்தை இருக்கா?''

பார்வையாளர் வரிசையில் 'கொல்' லென்று சிரிப்பொலி எழுந்தது.

வடிவு எதிர்த் தரப்பு வக்கீலை எரித்து விடுவது போல் பார்த்தாள்.

அரசுத் தரப்பு வக்கீல் எழுந்தார்.

''அப்ஜக்ஷன் யுவர் ஆனர்... எதிர்த் தரப்பு வக்கீல் வாதியைக் களங்கப்படுத்தும் நோக்கத்துடன் இந்தக் கேள்வியைக் கேட்கிறார் என்றே நினைக்கிறேன்....''

''நத்திங் யுவர் ஆனர்! கல்யாணத்துக்கும் குழந்தை பிறப்பதற்கும் சம்பந்தம் இருந்து தீரவேண்டிய கட்டாயமில்லை. மனைவியாகாமலும் தாயாகலாம் என்பதை அரசுத் தரப்பு வக்கீல் உணர்வார் என்று நம்புகிறேன்.''

''எஸ்...ப்ரொஸீட்...'' ஜட்ஜ் அனுமதியளித்தார்.

''மிஸ் வடிவு..! இதோ குற்றவாளிக் கூண்டிலே இருக்காரே இவரை இதற்கு முன்னே பார்த்திருக்கீங்களா?''

''ஆம்...''

''எப்போது?''

''போன மாசம் பன்னிரண்டாம் தேதியன்று அவரது ஆபீஸில்!''

''எதுக்கு அங்கே போனீங்க?''

''வேலை தேடி...''

''வேலை கிடைச்சுதா?''

''இல்லே. மறுநாள் இண்டர்வியூவுக்கு வீட்டுக்கு வரச் சொன்னார்...''

''போனீங்களா?''

''உம்...''

''வீட்டுக்கு வரச் சொன்னார்னு போனீங்களே! அது வேறே எதுக்காவது இருக்கும்னு தோணலியா?''

''இல்லே.''

''என்ன காரணம்?''

''அவரோட வயசு அப்படி நினைக்கத் தோணலே...''

''ஓஹோ! சரி....

('இதற்குப் பிறகு நடந்த குறுக்கு விசாரணையை வெளிப்படையாக எழுதினால் ஆபாசம் என்பீர்கள். அதனால் அவைகளை 'சென்ஸார்' செய்து விட்டேன்' – பெமினா).

கேள்விகள் வழக்குக்கு எந்தவித சம்பந்தமுமில்லாமல் நீண்டு போயின. உதாரணத்துக்கு என்று:

''கடைசியா என்ன படம் பார்த்தீர்கள்?''

மீண்டும் அரசு வக்கீல் குறுக்கிட்டு ஆட்சேபித்தார். நீதிபதி அதை ஏற்றுக்கொண்டு சொன்னார்: ''வழக்கு சம்பந்தமான கேள்வியை மட்டும் கேளுங்கள்!''

''எஸ் யுவர் ஆனர்!'' எதிர்த்தரப்பு வக்கீல் சம்மதித்தார்.

''ஏம்மா இருபத்தியஞ்சு வயசாகியும் ஏன் கல்யாணமே பண்ணிக்கல்லே?''

''சமூகக் கொடுமை...''

''அப்படீன்னா....?''

''உங்களை மாதிரி ஆம்பிளைங்க வரதட்சணை என்ற பெயரால் செய்யற கொடுமை. ஒரு ஆம்பிளையை எஜமானனாய் விலைக்கு வாங்க என்கிட்டே பணமில்லே...''

---

## தண்ணீர் தண்ணீர்...

திரைப்படத்தின் பெயரல்ல! இங்கே தெரிவிப்பது - சமீபத்திய ஒரு அனுபவம்.

சென்னை எழும்பூர் பிளாட்பாரத்தில் இரவு வண்டிக்குப் போகிறவர்கள் - குடி நீருக்குத் திண்டாடுகிறார்கள்!

(கடந்த 24-10-81 இரவு திருவனந்தபுரம் பாசஞ்சர் வண்டிக்குப் புறப்பட்ட நானே இந்த அவதிக்கு ஆளானேன்)

விசாரித்ததில் எழும்பூர் கிணறு வற்றி விட்டதாம்! காலையில் கொஞ்சம் வருமாம். பிறகு வருவதில்லையாம்! 'இப்போது தண்ணீர் பஞ்சம்-மழை பெய்தால் தீரும்!' என்றார் ஒரு போர்ட்டர்.

-ஏ. சுவாமிநாதன்

கூட்டத்திலே சிரிப்பொலி எழுந்தது. நீதிபதி மேசையைத் தட்டி அமைதியை உண்டாக்கினார்.

எதிர்த் தரப்பு வக்கீல் மூக்குக் கண்ணாடியைத் துடைத்து, மீண்டும் அணிந்த பின் நமுட்டுச் சிரிப்புடன் அவளை நோக்கி வந்தார்.

''கேட்கிற கேள்விக்கு உண்டு இல்லைன்னு பதில் சொன்னால் போதும். செக்ஸ் புத்தகம் படிப்பியா?''

''ராஸ்....'' — வாய்வரையிலும் வந்துவிட்ட வார்த்தையை வடிவுக்கரசி சிரமப்பட்டு அடக்கிக் கொண்டாள். எதிர்த் தரப்பு வக்கீல் முகத்தில் அசடு வழிந்தது.

வடிவு கோபத்தில் தன்னை மறந்திருந்தாள். 'முட்டாளே! ஒரு பெண்ணை அவமானப்படுத்தவா இவ்வளவு கஷ்டப்பட்டுப் படித்து இந்தக் கறுப்புக்கோட்டுக்குள் புகுந்து கொண்டாய்?' என்று கேட்க வேண்டும் போலிருந்தது அவளுக்கு!

''எம்மா! வேலைக்காகத்தானே அவர் வீட்டுக்குப் போனே?''

''ஆமாம்.''

''அப்ப அவர் உன்னைப் பலாத்காரம் பண்ணினாரா?''

''ஆமாம்.''

''உன்னைக் கட்டிப் புடிச்சுப் பலாத்காரம் பண்ணினப்போ உன்னோட கை அவரோட முதுகுக்குப் பின்னால்தானே இருந்தது?''

''ஆமாம்! ஆமாம்! ஆமாம்!''

வடிவு எரிந்து விழுந்தாள்.

எதிர்த் தரப்பு வக்கீல் மந்தகாசப் புன்னகையுடன், ''ப்ளீஸ் நோட் திஸ் பாயிண்ட் யுவர் ஆனர்....'' என்றார்.

அத்துடன் குறுக்கு விசாரணை முடிந்தது.

மீண்டும் கோர்ட் கூடியபோது எதிர்த் தரப்பு வக்கீல் தமது ஆர்க்யூமெண்டை இப்படிச் செய்தார்:

''ஆபீஸில் போய் வேலை கேட்டுக் கிடைக்காததால், வீட்டுக்குப் போய்த் தனது இளமையைக் காட்டியாவது வேலை வாங்கிவிடலாம் என்ற நோக்கத்துடன் வாதி, பிரதிவாதியின் வீட்டுக்குச் சென்றார். அவரது அங்க சேஷ்டைகளில் மனம் தடுமாறிய பிரதிவாதி அவளைத் தம் இச்சையைத் தீர்க்கப் பயன்படுத்திக் கொண்டார். இது தான் நடந்தது. இளமையை விருந்து வைத்த பிறகும், வேலை கிடைக்காது என்று தெரிந்ததினால் கோபம் கொண்டு தன்னைக் கற்பழித்ததாக வாதி புகார் கொடுத்திருக்கிறார். அது உண்மையல்ல என்பது வாதியின் மொழியிலிருந்தே தெரிகிறது. 'பிராவின் ஹூக்கைத் தான் விரும்பாத ஓர் ஆடவன் அகற்ற முயற்சி செய்கையில் ஒரு பெண் தனது பலம் முழுவதையும் உபயோகித்து அவனைப் பின்னுக்குத் தள்ளவே முயலுவாள். வாதியின் வாக்குமூலப்படி வாதியின் கைகள் பிரதிவாதியின் முதுகுக்குப் பின்னால் இருந்ததாகத் தெரிய வருகிறது. அப்படியென்றால் என்ன பொருள்? வாதி உணர்ச்சிவசப்பட்டுப் பிரதிவாதியைத் தன்னோடு சேர்த்து அணைத்துக் கொண்டார் என்பதுதானே?... இதெப்படி கற்பழிப்பு வழக்காகும்? ஆகவே மேன்மை தங்கிய கனம் நீதிபதி அவர்கள் இந்த வழக்கைத் தள்ளுபடி செய்ய வேண்டுமெனக் கேட்டுக் கொள்கிறேன்...''

எதிர்த் தரப்பு வக்கீலின் வாதங்கள் அங்கிருந்தவர்களைப் பிரமிக்க வைத்தது. ஆழ்வார் வெற்றிப் புன்னகை புரிந்தார். வடிவு சிலையாய் நின்றாள்!

பிறகென்ன?....

எதிர் வக்கீலின் நியாயமான(?) சந்தேகங்களை ஏற்று வழக்கை நீதிபதி தள்ளுபடி செய்தார்.

உடலும் உள்ளமும் சேர்ந்து எரிய, இதயத்தில் சுழன்றடித்த சூறாவளிக் காற்றில் உடல் நடுங்க, வழியும் கண்ணீரைச் சேலைத் தலைப்பால் துடைத்தபடி வடிவு கோர்ட்டுக்கு வெளியில் வந்தாள்.

பின்னால் தொடர்ந்து வரும் 'சமூக' பேச்சுக்கள்... எதிரே சுவரில் ஒட்டப்பட்டிருந்த தேர்தல் சுவரொட்டியில் 'தாய்க் குலத்துக்காக' நீலிக் கண்ணீர் வடிக்கும் அரசியல் தலைவர்கள்.

அவளுக்கு என்ன தோன்றியதோ—

எச்சிலைக் கூட்டி 'த்தூ...' என்று காறி உமிழ்ந்தாள். இந்தச் சமூகமும் அதன் சட்டங்களும், பெண்ணுரிமை பேசும் போலி முகமூடிகளும் தங்களது முகத்தில் அந்த எச்சிலை வாரிப் பூசிக் கொண்டனவோ... அவள் கண்களைத் துடைத்துவிட்டுக் கொண்டு திட மனத்துடன் நடந்தாள்.





திரு டி. ஆர். ராமச்சந்திரன் தான் முதல் முதலில் முழுநீள ஹாஸ்யப் படத்தில் நடித்தவர். படத்தின் பெயர் 'சபாபதி'. அன்று அவருக்கு ஜோடியாக நடித்தவர் பத்மா. இன்று நகைச்சுவை நடிகராகப் புகழ் பெற்று பல படங்களில் நடித்து வருபவர் ஒய். ஜி. மகேந்திரா. அவருடன் வனிதாவும் சேர்ந்து கொள்கிறார். அந்தக் கால நகைச்சுவை ஜோடியை இந்தக் கால நகைச்சுவை ஜோடி சந்திக்கிறது.

# சிரிக்கவைக்கும் நடிப்பு

✕ பத்மா, வனிதா, 'மகேந்திரன், டி. ஆர். ஆர்



✕ 'சபாபதி' டி.ஆர்.ஆர்-பத்மா

மகேந்திரன் : வணக்கம் சார். உங்களைச் சந்திச்சதிலே ரொம்ப மகிழ்ச்சி.

வனிதா: ஆமா சார். வணக்கம். முதல்லே எனக்கு ஒரு ஜோக் சொல்லுங்க சார். —அந்தக் காலத்திய சினிமா ஜோக்!

பத்மா: ஆமா ஆமா. விடாதீங்க. டி. ஆர். ஆர். அண்ணவை! மடக்குங்க!

டி. ஆர். ஆர்.: அதுக்கென்ன தாராளமாச் சொல்றேன். அந்த நாளை அறுவை ஒண்ணு. கேட்டுக்குங்க! 'கண்ணகி படத்திலே ஒரு காட்சி. நான் என் நெற்றியில் ஒரு பக்கம் விபூதியும் ஒரு பக்கம் நாமமும் போட்டுக் கொண்டு வருவேன். என் பக்கத்து வீட்டிலிருப்பவர் என்னைப் பார்த்து ''என்ன இது ஒரே நெற்றியில் நாமமும் விபூதியும் போட்டிருக்கீங்க?'' எனக் கேட்பார். ''என் அம்மா ஸ்மார்த்தா. என் அப்பா வைஷ்ணவர். இரண்டு பேரையும் திருப்திப் படுத்துவதற் காகத்தான்' என்பேன்!

மகேந்திரன்: இனி உங்க 'டர்ன்.' ஜோக் சொல்லுங்க!

மகே: இருங்க சர்ர். நான் இன்னும் சிரிச்சு ஓயலே.... சரி, ஆரம்பிக்கட்டா! 'நவக்ரகம்' தான் என் முதல் படம். அந்தப் படத்தில் நடிச்சவங்க எல்லாருமே பெரியவங்க. நாகேஷ், மேஜர், ஸ்ரீகாந்த்... டைரக்ஷன் பாலசந்தர். ஏதோ சர்க்கஸ்லே இருக்கிற புலிக்கூண்டுக்குள்ளே நான் நுழையற மாதிரி இருக்கும் எனக்கு. காட்சி பிரகாரம் நாகேஷ் காணாமல் போய்விடுகிறார். எல்லாரும் அவரைத் தேடணும். எனக்குச் சொந்தமாகப் படத்திலே ஏதாவது செய்ய வேண்டும் என்று ஆசை. பக்கத்திலிருந்த நாகேஷிடம் கேட்டேன். ''எல்லோரும் ஒவ்வொரு இடத்தில் தேடுவார்கள். நான் இருக்க முடியாத இடத்தில் நீ மிகவும் சீரியஸாகத் தேடுவது போல் நடித்தால் மக்களை அந்தக் காட்சி கண்டிப்பாய்க் கவரும்'' என்றார். நானும் சரி என்று காட்சியின்போது டேபிளின் மீது வைக்கப்பட்டிருந்தபுலி பொம்மையை எடுத்து.அதன் கழுத்தைத் திருகி கழற்றிப் பார்த்து விட்டு, ''ஊஹூம்! இங்கிருக்க முடியாது'' என்று சொல்லி விட்டுப் போவேன். இப்ப நீங்க சிரிக்கறீங்களோ இல்லையோ தியேட்டரிலே அந்தக் காட்சியில் ஜனங்கள் கொல்லுன்னு சிரிச்சாங்க!

டி.ஆர்.ஆர்.: அதிலே ஒண்ணும் அதிசயம் இல்லை. ஜோக்குக்குச் சிரிக்கிறது வேறு, சினிமாவிலே சிச்சுவேஷனுக்குத் தக்கபடி வரும் நகைச்சுவை ஆக்ஷனுக்குச் சிரிக்கிறது வேறு தானே! அந்தக் காட்சியைக் கற்பனை பண்ணிப் பார்த்து என்னால் மகிழ முடிகிறது!

வனி: ஆக்ஷன் ஹியூமரா இல்லாமே மகேந்திரன் அடிச்ச ஜோக் ஒன்றையே சொல்லட்டா?

டி. ஆர். ஆர்.: சொல்லு சொல்லு!

வனி: அரிச்சந்திரனுக்குப் பிடிச்ச பிஸ்கட் எது? தெரியுமா?

டி. ஆர். ஆர்.: ,தெரியலையே?

வனி: ட்ரு பிஸ்கட்!... இதுக்கு மேல ஜோக் ரவுண்டெல்லாம் வராதீங்க. போதும்!

டி. ஆர். ஆர்.: போதும்னு நீ சொல் விட்டா விட்டுருவோமா? கேளு! கேட்டுத் தான் ஆகணும்! திருவள்ளுவர் படத்திலே ஒரு காட்சி. நான் ஒரு அசட்டுப் பிள்ளை. என் ஆசிரியர் கோபத்துடன், ''நான் வெளியே போகிறேன். திரும்பி வருவதற்குள் பாடங்கள் எல்லாவற்றையும் கரைத்துக் குடித்திருக்க வேண்டும்.'' என்று கூறுகிறார். நான் அவசரம் அவசரமாகப் பாடங்கள் எழுதப்பட்டுள்ள ஓலைச் சுவடிகளை எடுத்து வந்து அம்மியில் வைத்து அரைத்துத் தண்ணீரில் கலந்து குடிக்கத் தொடங்கும்போது ஆசிரி



''உங்க பையன் தென்னை மரமாட்டம் வளர்த்தியா இருக்கிறானே....?''

''அவன் அம்மா அரசமரத்தைச் சுற்றும்போது பக்கத்திலிருந்த தென்னை மரத்தையும் சேர்த்துச் சுற்றிவிட்டாள்....!''

யர் வந்துவிடுகிறார். விழி பிதுங்க நான் முழிக்க அவர் பதிலுக்குத் திகைத்து முழிக்க..

மகே: ரசிகர்கள் நிச்சயமாக ஜோக் புரியாம முழிச்சிருக்க மாட்டாங்க. அட்டகாசமாய்ச் சிரிச்சிருப்பாங்களே! வாத்தியார்—மாணவன் என்றதும் எனக்கு நூற்றுக்கு நூறு படம் நினைவு வருது. கிளைமாக்ஸ் காட்சியில் நான் தமிழில் எழுத வேண்டும். நான் இரண்டாவது மொழியாகப் பள்ளியில் ஹிந்தி எடுத்துக் கொண்டதால் தமிழ் உண்மையிலேயே தகராறுதான். எனவே உதவி இயக்குனரிடம் விஷயத்தைச் சொல்லி எழுத வேண்டிய வார்த்தைகளுக்கு வல்லின, மெல்லினங்களைக் கற்றுக்கொண்டேன். காட்சியின்போது சரியாக எழுதிவிட்டேன். பாலசந்தர் என்னை அழைத்து ''தமிழ் தகராறு?'' எனக் கேட்டார். ''ஆமாம்'' என்றேன். ''அதானே பார்த்தேன். தப்பாக எழுதச் சொன்னால் சரியாக எழுதித் தொலைத்திருக்கிறாயே'' என்று கோபமாகச் சொன்னார். பிறகு ''சரி! சரி! சண்டைக் காட்சிகளுக்கு டூப் போடுவது போல் உன் கையெழுத்துக்கும் டூப் போடுகிறேன்'' என்றார். படத்தில் நீங்கள் பார்த்தால் நான் எழுத ஆரம்பிக்கும் காட்சி தெரியும். பிறகு ஒரு கை மட்டும் எழுதும்! வேறு யாருடைய கையோ!

டி. ஆர். ஆர்.: கை என்றவுடன் 'அடுத்த வீட்டுப் பெண்' படத்தில் நான் அஞ்சலி தேவியின் கையால் அடிபட்டது நினைவுக்கு வருகிறது. நான் செய்யாத தப்புக்காக நடு ரோட்டில் அஞ்சலி என்னை அடித்து விடுகிறார். எனக்கோ கோபமான கோபம்! திரும்பவும் அவரை அடிக்க நான் விரும்புகிறேன். என்ன செய்வது என்று புரியாத நிலையில் அவரைப் பின் தொடர்ந்து அடிக்கடி கையை ஓங்கிச் சமயம் கிடைத்தால் அடிக்க விரும்புகிறேன். ஆனால் அவர் திரும்பிப் பார்க்கும் போதெல்லாம் பயந்து வேறு ஏதோ செய்வது போல் நடிப்பேன். டக்கென்று பக்கத்திலுள்ள போஸ்ட் பாக்ஸில் கையை விட்டுக் கடிதம் போடுவது போல் நடிப்பேன். இப்படி ஒவ்வொரு முறை அடிக்கக் கை ஓங்கி வேறு ஏதோ செய்து முடிக்கும்போதும் கொட்டகையில் சிரிப்பொலி அதிரும்!

மகே: சினிமாவில் இடம் பெறாத ஒரு நகைச்சுவை விசேஷத்தைச் சொல்லட்டா? 'நூற்றுக்கு நூறு' படத்தில் டான்ஸ் சீன். டான்ஸ் மாஸ்டர் மறைந்த திரு கோபால கிருஷ்ணன். அவருடைய தலையெழுத்து எனக்கெல்லாம் கூட டான்ஸ் கத்துக் குடுக்கணும்னு! எனக்கு தபலா, டிரம்மெல்லாம் வாசிக்கத் தெரிஞ்சதாலே தாளம் தப்பாம ஆடுவேன். பின்னணியில் டி. எம். சௌந்தரராஜன் குரல் ஒலிக்கிறது. அதிலே எனக்கு ஒரே பெருமை! 'டேக்'னு சொன்னார் பாலசந்தர். பிரமாதமா ஆடினேன். டேக் முடிஞ்சதும், பாலசந்தர் என்னிடம் வந்து ''டான்ஸ் ரொம்பப் பிரமாதம்; ஆனா டி.எம். சௌந்தரராஜன்னு ஒருத்தர் பாடியிருக்காரே அதுக்கு யார் வாயசைப்பா? உங்க வீட்டுலேருந்து யாராவது வருவாங்களா?'' அப்படின்னாரு. அப்பத்தான் டான்ஸ் நல்லா ஆடணும்கிற நினைப்பிலே லிப் மூவ்மெண்டையே மறந்திட்டேன்கிற நினைப்பு எனக்கு வந்தது!

வனிதா: போதுங்க! இதுக்கு மேலே சிரிச்சு நம்மாலே சமாளிக்க முடியாது!

பத்மா: ஆமா அடிக்கடி சிரிக்கிற மாதிரி நடிக்கிறது ரொம்பக் கஷ்டமா யிருக்கு!

டி. ஆர். ஆர்.: பலே இத்தனை ஜோக்கிலேயும் இப்பக் கடைசியா பத்மா அடிச்ச ஜோக் தான் பெஸ்ட்!

[சிரித்தபடியே விடைபெறுகின்றனர்.]

உரையாடல், தொகுப்பு: சலன்

புகைப்படம்: ஹரீஷ்



# நவ இளைஞர்களான குழந்தைகள்!

மலர் மன்னன்

பாரதத்தையும் சேர்த்து முப்பது நாடுகளின் பங்கேற்பு. குழந்தைகள் திரைப்பட விழாக்களுக்கான ஐந்து சர்வதேச கேந்திரங்களுள் பாரதமும் ஒன்று என்ற அங்கீகாரம் இவை இந்தத் தடவை நடந்த குழந்தைகள் திரைப்பட விழாவின் சிறப்பு அம்சங்கள்.

சுமார் நூறு படங்கள். இவற்றில் நாற்பதுக்கு மேல் கதைப் படங்கள்.

பெரியவர்களுக்கு நெருக்கடி நிலைக்கான நிலைமைகளை ஞாபகப்படுத்தும் சத்ய ஜித் ராயின் 'ஹீராக் ராஜார் தேஷே' என்ற வங்காளிப் படத்திலிருந்து இந்திய நாட்டு நாய்ச் சிறுவனை நினைவூட்டும் வால்ட் டிஸ்னியின் 'ஜங்கிள் புக்' வரை பல வகைப் பட்ட படங்களைப் பார்க்க வாய்ப்புக் கிடைத்தது. முதல் இரண்டு நாட்களில் பார்க்க முடிந்த படங்களில் குறிப்பிடத் தக்கவை:





"குழந்தைகள் தங்களைக் குழந்தைகளாகக் கருதிக் கொள்வதில்லை. 'குழந்தைகள்' என்ற முத்திரையைப் பெரியவர்கள் தங்கள் மீது குத்துவதை அவர்கள் விரும்புவதில்லை. குழந்தைகளுக்கான படங்களைக் காணக் குழந்தை ஆர்வம் காட்டாததன் காரணம் இதுதான் என்று கண்டுபிடித்தோம். 'குழந்தைகள் திரைப்படம்' என்பதற்குப் பதிலாக 'நவ இளைஞர் திரைப்படம்' என்று மாற்றியமைத்தோம். பலன் உடனே தெரிந்தது. இப் படங்களைக் காண வரும் குழந்தைகளின் எண்ணிக்கை பல மடங்கு அதிகரித்துள்ளது"— இது இந்தியக் குழந்தைகள் திரைப்படச் சங்கத் தலைவர் வி. சாந்தாராம் தரும் தகவல்.

சென்னையில் நடைபெற்ற சர்வதேசக் குழந்தைகள் திரைப்பட விழா 'நவ இளைஞர் திரைப்பட விழா' என்று அழைக்கப்பட்ட போதிலும் நான்கிலிருந்து எட்டு வயதான குழந்தைகளுக்கும் ஒன்பதிலிருந்து பதினைந்து வயதுவரையிலான வளர்ந்த குழந்தைகளுக்குமான திரைப்படங்களையே திரையிட்டது.

### தி கேர்ல் அண்ட் தி டிராகன் (பல்கேரியா)

அடிக்கடி ஏற்படும் பூகம்பத்துக்கான மையத்தைக் கண்டறியச் செல்லும் பேராசிரியர், பூமிக்கடியில் மாளிகை அமைத்துக் கொண்டு கொட்டமடிக்கும் அரக்கன், அவனுக்கு உதவியாக, 'தங்களில் யார் பெரியவன்' என்று போட்டியிட்டுக் கொள்ளும் இரண்டு மந்திரவாதிகள். அரக்கனுக்கு விருந்தாக வேண்டும் என்பதற்காகவே நகருக்குள் புகுந்து ஓர் இசைக் கலைஞனைப் பிடித்துக் கொண்டு போகிறான் அரக்கனின் மந்திரவாதிகளில் ஒருவன். பேராசிரியரின் துணையையும் சேர்த்துக் கொண்டு அந்தக் கலைஞனை விடுவிப்பதோடு அரக்கனின் கொட்டத்தையும் அடக்குகிறாள் கலைஞனின் பதினொரு வயது மகள்.

### தி என்சான்டட் குரோவ் (ருமேனியா)

சித்தியின் கொடுமையைத் தாங்க மாட்டாமல் தாத்தா – பாட்டியைத் தேடி வரும் குழந்தையின் கதை யென்றாலும் இயற்கைச்

செல்வங்களைப் போற்றிப் பாதுகாக்க வேண்டும் என்ற எண்ணத்தை இளம் நெஞ்சங்களில் வேரூன்றச் செய்யும் படம்.

**தி கேங்க் நெக்ஸ்ட் டோர் (நெதர்லாந்து)**

'டீன்ஏஜ்' குழந்தைகள் விளையாட்டாகத் தவறுகளைச் செய்து விட்டாலும் அவற்றின் விளைவுகளைப் பார்த்தவுடன் தாங்களே அவற்றுக்குப் பிராயச்சித்தம் தேடத் தொடங்கி விடுகிறார்கள் என்பதை உணர்த்தும் அருமையான படம்.

**சம்மர் ஆஃப் தி ட்ராய்ஸ் (ஸ்வீடன்)**

காடுகளைப் பாதுகாப்பதில் மேலை நாடுகள் தீவிர அக்கறை செலுத்தத் தொடங்கி



யிருப்பதைப் புலப்படுத்தும் மற்றொ... சிறந்த படம். நிறையப் பணம் சம்பாதிப்பதற்காகத் தனக்குச் சொந்தமான காட்டை அழிக்க ஏற்பாடு செய்தவன் கடைசியில் தன் எண்ணத்தை மாற்றிக் கொள்ள வேண்டியதாகிறது. 'காடு தனிப்பட்ட ஒருவருக்கு மட்டும் சொந்தமல்ல. உலகிலுள்ள சகல ஜீவராசிகளுக்கும் அது உரியது. தூய காற்று, தூய தண்ணீர், சீரான பருவ கால அமைப்பு எல்லாவற்றுக்கும் இன்றியமையாதது கானகமும் அதில் மண்டிக் கிடக்கும் மரங்களும்' என்ற உண்மையைக் குழந்தைகளின் மனத்தில் ஆழப் பதியுமாறு சுவாரஸ்யமாக எடுத்துச் சொல்லும் படம் இது.

**தி யங் டீச்சர் (சீனு)**

'குழந்தைகள் மீது பெரியவர்கள் தங்கள் சித்தாந்தங்களைத் திணிக்கக் கூடாது. குழந்தைகளின் கற்பனை வளம், அறிவு வளர்ச்சி ஆகியவற்றுக்கு சுவாரசியமான, மாயாஜால தேவதைக் கதைகள் அவசியம். பிற்போக்குத்தனமானவை என்றுஅவற்றைப் புறக்கணித்து விடக் கூடாது' என்பதை வலியுறுத்தும் இந்தப் படம் செஞ்சீனத்திலிருந்து வந்திருப்பது ஓர் ஆச்சரியம். ஆனால் சீனாவின் இன்றைய ஆட்சியாளர்கள் முன்பு நடந்த 'கலாச்சாரப் புரட்சி'யைக் கண்டித்துப் பிரசாரம் செய்வதற்கென்றே இப்படி ஒரு படம் தயாரிக்கப்படுவதை ஊக்குவித்திருக்கிறார்கள் என்பது போகப் போகப் புலப்படத் தொடங்கிவிடும்போது ஆச்சரியம் அடங்கிச் சூள் கொட்ட ஆரம்பித்துவிடுகிறோம்.

**அன்பின் அலைகள்**

என்ற தமிழ்ப் படம் விழாவில் இடம் பெற்ற படங்களில் ஒன்று. பூவண்ணனின் கதையில் பழுதில்லை. ஆனால் படம் எடுத்தவர்களின் திறமைக் குறைவு... வேண்டாம், ஏனென்றால், சாந்தா ராம் பத்திரிகையாளர்களை முதன் முதலில் பார்த்தவுடன் விடுத்த வேண்டுகோள் நினைவுக்கு வருகிறது.

''நம்மவர்களில் குழந்தைகளுக்கான படங்களைத் தயாரிக்கத் துணிபவர்கள் மிக மிகக் குறைவு. ஓரேயடியாக மட்டந்தட்டி அவர்களைச் சோர்வடையச் செய்து விடாதீர்கள்.''

- ✖ தி கேங் நெக்ஸ்ட் டோர் (நெதர் லாந்து)
- ✖ ஹீராக் ராஜார் தேஷே (வங்காளி)
- ✖ தி என்சான்டட் குரோவ் (ருமேனியா)
- ✖ நாயின் விடுமுறை (செக்கோஸ்லாவாகியா)

2nd iff INDIA 81





"அன்னை பராசக்தி" "அங்காள பரமேஸ்வரி தாயே துணை"

சேலம் சித்த வைத்தியர்

# டாக்டர் S. R. சிவராஜ்

அவர்களின் சாதனை

**சிவராஜ் சித்த வைத்தியசாலையில் தயாராகும் மருந்துகள், பிணிகளை நீக்கவும், புத்துயிரளிக்கவும் பெரிதும் உதவுகிறது**

○ குழந்தை பாக்கியம் (கெர்ப்பஹனுக்கள்) இல்லாதவர்கள், ○ ஆண்மை வீரியம் இல்லாமல் பலஹீனமடைந்தவர்கள், ○ வாலிபத்தை வீணாக்கி, சக்தி இழந்தவர்கள், பயமுள்ளவர்கள் ○ கல்யாணம் செய்யப் பயந்து காலம் கடத்தி வருபவர்கள் ○ அதிக உஷ்ணம் — கண் எரிச்சல் — தூக்கமின்மை — உடல் வலி, ○ நரம்புத் தளர்ச்சி உடலுறுப்புக்கள் தளர்ச்சி — நடுக்கம், ○ மற்றும் உங்கள் ரகசிய வியாதிகளுக்கும்

நாள்பட்ட ஆஸ்துமா — இளைப்பு — இருமல் — தும்மல் — மூக்கடைப்பு — பீனிசம் — சளிதொல்லை — இருதய வலி — படபடப்பு — அன்ன விளாவைத் தூக்கி தூக்கி மூச்சு வாங்குதல் — கோளமு கட்டு, பனி, மோடம், மழை காலங்களில் ஏற்படும் இளைப்பு — கர் புர்ரென்று மேல் மூச்சு போன்ற கப வியாதி பித்தத்தினாலும், வாய்வுனாலும் ஏற்படும் மலச்சிக்கல் — மலக்கட்டு, வயிற்றுவலி — குடல் புண் — பித்த மயக்கம் — தலைவலி — தலைபாரம் நாள்பட்ட ஒரு தலைவலி — கண் பார்வையில் பூச்சு பறப்பது போலிருத்தல் பசியின்மை — பொருமல் — வயிருப்புசம் — காமாலை — சோகை — இரத்தக்குறைவு மேகத்தினாலும் — தொத்து வியாதியினாலும், விஷப்பூச்சுகள் கடியினாலும் ஏற்படும் சரும நோய்கள் — படைகள் — ஊரல் — அரிப்பு — கருநிற, செந்நிற படைகள் — செதில்களாக உதிரும் கிரந்தி படைகள் — வெள்ளை மேகம், பாதவெடிப்பு — பனி வெடிப்பு முதலான நோய்கள், பெண்களுக்கு ஏற்படும் சகலவித நோய்கள், மேலே குறிப்பிட்ட வியாதியஸ்தர்கள் எமது பிரதம டாக்டரை

◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇ **சென்னையில் கீழ்க்கண்ட இடங்களில்** ◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇

சந்தித்து வைத்திய ஆலோசனை பெறலாம்

கீழ்க்கண்ட தங்குமிடங்களில் எமது கிளை அலுவலகத்தில் எமது மருந்துகள் கிடைக்கும்

கிளை வைத்தியசாலை

**சென்னை - 1**

தேதிகள் : 1 முதல் 3 தேதி வரை

பிரதம வைத்தியர்

**ஹோட்டல் ரோலக்ஸ் ரூம் நெ. 56**

போன் : 24236

(190 N S C போஸ் ரோடு (சைனா பஜார்)

(பூக்கடை — டெலிபோன் ஆபீஸ் எதிரில்)

சென்னை - 1

பார்க்கும் நேரம்: காலை 8 மணி to இரவு 8 மணி

கிளை வைத்தியசாலை

**சென்னை - 2**

தேதிகள் 4ந்தேதி முதல் 8ந்தேதி வரை

பிரதம வைத்தியர்

**ராமச்சந்திரா லாட்ஜ் ரூம் நெ. 36**

போன் : 846526

7, அத்திப்பட்டன் தெரு மவுண்ட் ரோடு

PORR & சன்ஸ் — பெட்ரோல் பங்க்

மேற்குபுரம், சென்னை - 2

காலை 8 மணி முதல் இரவு 8 மணி வரை

**ஆலோசனை கட்டணம் ரூ. 10-00 ❊ சிகிச்சைக் கட்டணம் தனி**

எமது லிஸ்ட் வேண்டுவோர் ரூ. 1-00 ஸ்டாம்ப் அனுப்பினால் M.O. செய்தோ பெறலாம்

**எமது உயர்ந்த — விசேஷ — ஸ்பெஷல் மருந்துகள் கிடைக்கும்**

| உயர்ந்தசிகிச்சை 1 மாதம் | | | ★ விசேஷ சிகிச்சை 1 மாதம் | | | ★ ஸ்பெஷல் சிகிச்சை 1 மாதம் | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| A வகுப்பு | B வகுப்பு | C வகுப்பு | A வகுப்பு | B வகுப்பு | C வகுப்பு | மீடியம் | ஸ்பெஷல் | 1 நெம்பர் |
| 1500-00 | 750-00 | 500-00 | 400-00 | 300-00 | 200-00 | 175-00 | 150-00 | 115-00 |

ஹெட்டாபீசுக்கு லெட்டர் எழுதி V.P.P. மூலமும் பெறலாம். தேவையான சிகிச்சைக்கு டிராப்ட் மூலம் (பேங்க் ஆப் இந்தியா) வாங்கி அனுப்பினால் ரிஜிஸ்டர் பார்சல் மூலம் பெறலாம். டாக்டர் S. R. சிவராஜ் ஹெட்டாபீஸில் 11, 16, 17, 18, 19, 20, 27, 28, 29, 30 தேதிகள் வரை சந்திக்கலாம். மற்ற நாட்களில் வெளியூரில் இருப்பார்.

## H.O. சிவராஜ் சித்த வைத்தியசாலை

**சென்ட்ரல் டாக்கீஸ் வடபுரமுள்ள ஏரியில் சேலம் — 636 007**

# ஸைலன்ஸ் ப்ளீஸ்!

சினிமா நடிகர்களைப் பற்றிச் செய்திகள் வருவது மாதிரி எழுத்தாளர்களைப் பற்றி வந்தால்.....

● முன்னைக்கு இப்போது சுஜாதா இளைத்திருந்தார். அந்த இளைப்பில் உயரம் கூட அதிகரித்திருப்பது போல் தோன்றியது. டைப் அடித்த களைப்போ என்னவோ, சற்று ஆயாசமாகக் காட்சியளித்தார். புன்னகை செய்தார். சிக்கனமான சிரிப்பு.

சாவியில் எழுதி ரொம்ப நாளாயிற்றே என்று கேட்டேன். யோசித்தார். ''பைபிள் படிச்சிருக்கீங்க இல்லே'' என்றார். சில விநாடிகள் மௌனம். பிறகு. ''கேளுங்கள், கொடுக்கப்படும்!'' (சாவி, Please make a note!)

சமீபத்தில் வெளியாகிக் கொண்டிருக்கும் ஒரு தொடர் கதையைப் பற்றி பேச்சு தாவியது. ''...அதுதான் Magnum opus ஆ?'' மறுத்தார். ''மற்றொரு ஓபஸ்! அவ்வளவு தான்'' என்றார்.

மீனாட்சிபுரத்தில் அண்மையில் நிகழ்ந்த மத மாற்றத்தைப் பற்றி நிறையத் தகவல்கள் (திடுக்கிடும்) சேகரித்து வைத்திருக்கிறாராம். பெரிய நாவல் எழுதப் போகிறாராம். ஆனால், ஜனரஞ்சகப் பத்திரிகையில் வராது: புத்தகமாகத்தான் வருமாம் – for obvious reasons. Best of luck சுஜாதா!

● கிராமத்துப் பஞ்சாயத்து மாதிரி சிவசங்கரி அப்போதுதான் உறவினர்களிடையே ஏற்பட்ட 'சச்சரவை'த் தீர்த்து வைத்தார். அவர் பொறுமை இழந்திருந்தார் என்பது பார்த்த உடனேயே தெரிந்தது. மேஜை மேல் பத்திரிகைக்கான தொடர் கதை அத்தியாயம் இருந்தது. போன் வந்தது. ஏதோ ஆபீஸ் ப்ராப்ளம் போலிருக்கிறது. பிரச்னைக்கான தீர்வைப் போனிலேயே தெரிவித்தார். (கணவர் சந்திரசேகரன் ஊரில் இல்லையாம்.)

எனக்குப் பிரமிப்பு தாங்கவில்லை. மை காட்!–

இல்லத்தரசி சிவசங்கரி–

நிர்வாகி சிவசங்கரி–

எழுத்தாளர் சிவசங்கரி–

எப்படி இவரால் சமாளிக்க முடிகிறது!

ஒரு மனிதனின் கதை சினிமாவாக வரப்போகிறதாம். அதற்காகவே ஒரு நடிகரை 'மிடாக் குடியனாக'த் தயார்ப்படுத்துகிறார்களாம். டைரக்டர் யார்? You will come to know என்கிற தொனியில் ஒரு புன்சிரிப்புச் சிரித்தார்.

கைவசம் இருக்கிற 'தீம்' – ஒரு குருட்டுப் பெண், ஊமையை மணந்து கொள்கிறாள். கால் ஊனமான குழந்தை. சிரமங்களைச் சமாளிக்கிறார்கள்.... பத்திரிகையில் வரப் போகிறதாம். முழு சன்மானத் தொகையும் சேவா நிலையத்துக்கு அன்பளிப்பாம்! Good, practices what She preaches!

● பாஸ்கரன் பிரபலமாகிக் கொண்டு வருகிறார், நன்றாக எழுதுகிறார் – என்றால் நிறையப் பேர் விழிப்பார்கள். ஆனால் சவிதா என்று சொன்னால், உடனே புரிந்து கொள்வார்கள். ஜெயகாந்தனை லேசாக நினைவுபடுத்தும், இவர் முகத்தில் இன்னும் கொஞ்சம் சோகம்



சவிதா



சுஜாதா



சிவசங்கரி

தெரிகிறது. (மனைவியை இழந்த சோகம்)

இரண்டு, மூன்று தொடர்கதைகள் சேர்ந்தாற்போல எழுதுவதால், Clash of idea வராதோ? வராதாம். முன்கூட்டியே திட்டமிட்டு, அத்தியாயவாரியாக இன்னின்ன எழுத வேண்டும் என்று தீர்மானமான பிறகு தான் பத்திரிகைகளுக்குத் தலைப்புக் கொடுக்கிறாராம். காகிதக் கட்டுக்கள் எக்கச்சக்கமாக மேசை மேல் இருந்தன – வேலையில்லா இளைஞனுக்கு வரும் 'ரிக்ரெட் கார்ட்' மாதிரி.

'இவளா என் மனைவி' சினிமா பாதியிலேயே நின்றிருக்கிறதாம். ''மறுபடியும் எடுக்க எண்ணம் இருக்கிறது'' என்றார் சவிதா.

வேறு இரண்டு பத்திரிகைகளுக்கும் தொடர்கதை எழுதப் போகிறாராம். பத்திரிகை தெரியவில்லை. தலைப்பை மட்டும் சொன்னார்: 'கோடைக்கால அணைப்புகள்', 'தொட்ட உடனேயே தொடு'. God! what titillating titles!

காணாத பேட்டியைக் கற்பனையாக எழுதியவர்: 'ஈஸ்வர்குமார்'

# தமயந்தியின் காதல்

ஜீரா



'வருக... வருக... காதல் கனலைக் கானல் நீர் என்று அருளிய நள மன்னரே, தங்கள் அமுத வாக்கினை அக்கு வேறு ஆணி வேறாக்க வந்திருக்கும் தமயந்தியைக் காண வருக, வருக!'

வகுப்பறையில் நுழையும்போது அவ்வப்போது கேட்டுப் பழகிப்போன கிண்டல் வரவேற்புதான். இன்று ஏதோ ஒரு வித்தியாசம் தெரிகிறதே. யார் அது தமயந்தி என்று தனக்குள் கேட்டுக் கொண்டே 'குட் மார்னிங் டு எவ்ரிபடி' என்று விட்டு நேராகத் தன் இருப்பிடத்துக்குச் சென்றான் நளன்.

''ம்ஹூஹூம்.. இவன் உருப்பட மாட்டான்'' என்று உதட்டைப் பிதுக்கிய வேலுமணி அவனருகில் சென்று குனிந்து ''ஹலோ மை டியர் டெஸர்ட் ராக். அட்லீஸ்ட் யார் அந்தத் தமயந்தி'னுகூட உங்க திருவாயைத் திறந்து கேட்கப்படாதோ?'' என்றான் எரிச்சலோடு.

''நியூ அட்மிஷனா இருக்கும்'' என்று சாவகாசமாகச் சொல்லிவிட்டுச் சாய்ந்து கொண்டான் நளன்.

''சை! நான் ஒரு மாக்கானும்பட்டி. உன்கிட்டே போய்க் காதலின் மகிமையைப் பத்திப் பேச வந்தேனே'' என்று தலையில் ஒரு தட்டு தட்டிக் கொண்டான் வேலுமணி.

''வேலுமணி, இவன் கிட்டப் பேசி எதுக்கு நேரத்தை வேஸ்ட் பண்ணறே? இவன் மாதிரி ஆளுங்கெல்லாம் காதல்னாலே வேப்பங்காய் மாதிரி போக்குக் காட்டுவானுக. ஒன்ஸ் பிடிச்சிடுச்சா... அப்புறம் பாரு. ஸ்பிரிட்டிலே தீக்குச்சியை உரசிப் போட்ட மாதிரி... ஆவியா அலைவானுக'' என்றான் பிரேம்.

இவர்களுடைய கிண்டல் பேச்சுக்களிலிருந்து தப்பிப் பிழைக்கவாவது யாரையாவது காதலிக்க வேண்டும் போல இருந்தது நளனுக்கு. அவன்தான் என்ன செய்வான்? அவனுடைய காதல் உணர்வுகளைத் தூண்டும் வகையில் இதுவரை எந்தப் பெண்ணும் அவன் முன்னே பிரசன்னமாகவில்லையே! ரவிக், டூ. வீ என மேஜர் எக்ஸ்போஷரான மைனரிகளை அவனும் ஓரக் கண்ணால் பார்க்கவே செய்கிறான். பார்த்த வேகத்திலேயே ஒதுங்கிக் கொள்ளத்தான் தோன்றுகிறதே தவிர எவளையும் காதலிக்கத் தோன்றவில்லையே!

''சந்திரோதயம், சந்திரோதயம்'' என்று கத்திக் கொண்டே ஓடி வந்தான் பிரபு. ''சந்திரோதயம் ஈஸ் ஆன் த வே''என்றான் உள்ளே வந்து மூச்சிரைக்க.

''தமயந்தி... என்ட்டரிங்... டொண்டொடைன்'' என்று யாரோ கூறி கூட்ட—

''டேய் நளா, எழுந்து வாடா... ஒரே செகண்ட்'' — இழுத்தான் வேலுமணி.

''விடுடா கையை உனக்கு வேற வேலையில்லே.'' என்று கையை உதறினான் நளன். யார் விட்டார்கள்? நாலைந்து பேர் சேர்ந்து ஒரே குண்டுக் கட்டாய்த் தூக்கி நளனை வராந்தாவில் கொண்டு வந்து நிற்கவைத்து விட்டார்கள்.

எரிச்சலுடன்—

அவர்கள் காட்டிய திசையில்—

அவன் பார்த்தது—

ஒரு வினாடிதான்.

அந்த ஒரு வினாடி... ஆல்மைட்டி!

அவனுடைய சபதக் கோட்டையை முற்றுகையிட்டு — கொத்தளங்களெல்லாம் மத்தளங்களாக அடித்து, உடைத்து, நொறுக்கி, எல்லாம் தூசி மேகங்களாக — இதுநாள்வரை அவனுடைய இதய அரியாசனத்தில் வீற்றிருந்த ஒரு தத்துவக் கிழவன் வான் வெளி

யில் தூக்கியெறியப்பட்டு — நட்சத்திர வானிலிருந்து வெண் துகில் அணிந்த ஒரு பேரழகுத் தேவதை மெதுவே... மெதுவே இறங்கி... அந்த அரியாசனத்தில் வந்து அமர்ந்து...

மறுபடியும் தனது இருப்பிடத்துக்கு வந்த போது தனக்குள் என்னென்னவோ மாற்றங்கள் நிகழ்ந்து விட்டதை உணர்ந்தான் நளன்.

கடைசியில் — அவனுடைய உள்ளத்தின் உறுதியைக் குலைக்க ஒருத்தி வந்தே விட்டாளா?

கையிழந்த ரவிக்கைகளிலும் — கவ்விப் பிடித்த உடைகளிலும் காணாத சௌந்தரியத்தை அவனுடைய கண்கள் தமயந்தியிடம் கண்டு விட்டன.

பிரேம் சொன்னதுநிதர்சனமாகிவிட்டதா?

தனக்குள் — காதல் கனல் சடசடவென்று பற்றிக்கொண்டு விட்டதா? — என்று திகைத்தான் நளன்.

''சித்ரகுப்தா!''

''ப்ரபோ''

''குற்றவாளிக் கூண்டிலே வெட்கத்தோடு நெளிந்து கொண்டிருக்கும் இந்த இளைஞன் யார்?''

''ஒரு கல்லூரி மாணவன் ப்ரபு.''

''இவன் செய்த குற்றம்?''

''கல்லூரி லைப்ரரிக்குப் போனது.''

''லைப்ரரிக்குப் போனது குற்றமா?''

''அது குற்றமில்லே ப்ரபு. இவன் காலேஜில் அட்மிஷன் ஆகி மூன்று வருடங்கள் முடிய இன்னும் முப்பது நாட்கள்தான் இருக்கின்றன. இந்த மூன்று வருடங்களாக ஒரு நாள் கூட போய் எட்டிப் பார்க்காத அந்த லைப்ரரிக்குக் கடந்த எட்டு நாட்களாக விடாமல் போவது ஏன்?''

''என்னிடமே கேட்கிறீயா?''

''இல்லே ப்ரபோ... என்னையே கேட்கிறேன். கேட்டுக்கேட்டு என் மூளைதான் கலங்க ஆரம்பித்து விட்டதே தவிர, காரணம் விளங்கவேயில்லே. இப்படி என் மூளையை இவன் கலங்க அடித்தது குற்றமில்லையா ப்ரபு?''

''சித்ரகுப்தா, காரணத்தை நான் விளக்குகிறேன். முதலில் உன் மிதியடிகளைக் கழற்று.''

''ப்ரபோ?''

''அதற்குப் பதிலாகக் காலச் சக்கரத்தை மாட்டிக் கொண்டு ஒரே நொடியில் எட்டு நாளைக்கு முன்னால் காலை சரியாக ஒன்பது ஐம்பத்து மூன்றில் போய் நில்.''

''விட்டேன், ப்ரபு.''

''பிரின்ஸ்பால் அறைக்கு முன்னால்...''

''ஒரு மார்க் ஃபோர் வந்து நிற்கிறது.''

''இப்போது?''

''சரிகை அங்கவஸ்திரம் போட்ட ஒரு பெரியவர் இறங்குகிறார்.''

''நெக்ஸ்ட்?''

''காரின் பின் கதவு திறக்கிறது. இப்போது இறங்குவது... ப்ரபோ, ப்ரபோ!''

''என்ன சித்ரகுப்தா,ஏனிந்தப்பதற்றம்?''

''பூலோகப் பெண்ணா அவள்?...அல்ல... சந்திரோதயம் ப்ரபோ... பட்டப் பகலில் ஒரு சந்திரோதயம்!''

''அதுவும் எட்டு நாட்களாக அந்த லைப்ரரிக்கு வருவதை நீ கவனித்திருந்தால் உனக்குக் காரணம் விளங்கி யிருக்கும்.''

வேலுமணியும், பிரேமும் தன்னைப் பார்த்துக் 'கொல்'லென்று சிரிக்கவும், இந்த 'ஸ்மைல் ப்ளீஸ்' நிகழ்ச்சிக்குத் தன்னைத் தூக்காத குறையாக ஏன் இழுத்து வந்தார்கள் என்று புரிந்தது நளனுக்கு. அசடு வழிய அந்தப் பக்கம் திரும்பியவனைப் புன்னகை தவழ ஓரக் கண்ணால் பார்த்தாள் தமயந்தி.

தங்கத் தூள்களாகத் தெரிந்தன பீச் மணல். அதைத் தன் கை விரல்களால் அளைந்து கொண்டே எதிரில் கால்களை மடித்துக் குனிந்தும் — குனியாமலும் அமர்ந்திருந்த தமயந்தியைக் கண்களால் விழுங்கிக் கொண்டிருந்தான் நளன்.

''தமயந்தி!''

''ம்''

''என்ன ஒண்ணுமே பேசாமல் உட்கார்ந்திருக்கீங்க?''

''என்ன பேசறது?''

''இப்ப நீங்க எவ்வளவு சார்மிங்கா இருக்கீங்க தெரியுமா?''

''நீங்களும்தான்.''

''தமயந்தி, உங்க பர்த் டேட்...ஐ மீன்... தேதியையும் மாசத்தையும் சொன்னால் போதும்.''

பெரிய ஜோக்கைக் கேட்டு விட்டதைப் போல் சிரித்தாள்.

''ஆச்சரியப்படாதீங்க. நாளைக்குத்தான் என் பர்த் டே''

''ரியலி?'' என்றான் ஆச்சரியத்துடன்.

''சென்ட் பெர்சண்ட்.''

''அப்போ, நாளைக்கு ஏதாச்சும் ப்ரோக்ராம்...''

''மகாபலிபுரம் போவோமா?''

''ஓ'' — வாயைப் பிளந்தான் நளன்.

''நாம ரெண்டுபேரும் ஜோடியா ஸ்கூட்டரில் போகணும்னு எனக்கு ஆசை'' என்று இழுத்தாள் தமயந்தி.

தமயந்தியின் அடக்கமான கவர்ச்சி எங்கோ பிசிறு தட்டுவது போலிருந்தது நளனுக்கு.

---

எல்லோரிடமும் 'என்னிடம் முறைச்சின்னா 206 அடி அடிப்பேன்'ங்கறீங்களே, 206 என்ன கணக்கு?''

''மனுஷன் உடம்பில் மொத்தம் 206 எலும்பு இருக்குன்னு உனக்குத் தெரியாதா?''

-கே. ஆர். எம்.



'ஏன், தன்னுடன் ஸ்கூட்டரில் ஜோடியாகச் செல்ல அவள் ஆசைப்படுவதில் என்ன தவறு?' தனக்குள்ளேயே கேட்டுக்கொண்டு, 'தவறெதுவுமில்லை' என்று தனக்குள்ளேயே ஒரு 'டிக்'கும் அடித்துக் கொண்டான்.

''ஷ்யூர் தமயந்தி'' என்றான் — உற்சாகத்தின் உச்ச கட்டத்தில்.

''தமயந்தி, ஸ்கூட்டரில் போகலாமே. உங்க ஹாஸ்டல் வழியாகத்தான் நானும் போகிறேன்'' என்றான் நளன்.

ஒரு நிமிடம் வெறித்த பார்வையுடன் நின்றிருந்துவிட்டு, ''காப்பி சாப்பிடுவோமா?'' என்றாள் தமயந்தி.

''வித் ப்ளஷர்''

இருவரும் எதிரில் இருந்த காண்டீனில் நுழைந்தனர். காப்பி சாப்பிட்டு முடியும்வரை இருவரும் எதுவும் பேசிக்கொள்ளவில்லை.

''ஸ்கூட்டர் புதுசா வாங்கினீங்களா?'' என்றாள் தமயந்தி கைக் குட்டையால் தன் உதடுகளை ஒற்றிக் கொண்டு.

''அது....அது... என் ஃப்ரண்டோடது. அடுத்த வாரம் அதை விலைக்கு வாங்கிடப் போறேன்.''

''அவ்வளவு அவசரமா எதுக்கு வாங்கறீங்க?''

''உங்களுக்காகத்தான் தமயந்தி.''

''எனக்காகவா?''-அவள் குரலில் தெறித்த ஏமாற்றம் நளனைத் திகைக்க வைத்தது.

''நளன், என்னை நீங்க இவ்வளவு மட்டமா எடை போடுவீங்கன்னு நான் எதிர்பார்க்கவில்லை.''

''தமயந்தி'' — நளன் திடுக்கிட்டான்.

''நீங்கதானே அன்னிக்கு என்னோட மகாபலிபுரத்துக்கு ஸ்கூட்டர்லே போகணும்னு ஆசையா இருக்குன்னு சொன்னீங்க!''

''சொன்னேன், உண்மைதான். நீங்க என்ன பதில் சொல்லியிருக்கணும்? 'என்கிட்ட ஏது ஸ்கூட்டர்? பஸ்ஸிலே வேணு போகலாம்'னு சொல்லியிருந்தா நான் சந்தோஷப் பட்டிருப்பேன். அதுக்குப்பதிலா ஸ்கூட்டர் கடன்வாங்கி வந்திங்க. இப்ப உங்க பொருளாதார நிலை இடம் தருமான்னுகூடப் பார்க்காம அதை விலைக்கு வாங்கப் போறதாவே சொல்றீங்க. ஒருத்திக்கு ஒருவனிடம் இல்லாத காதல் ஒரு ஸ்கூட்டரைப் பார்த்ததும் உதிச்சிடுமா? அப்படி உதிச்சா அதுக்குப் பேர் காதல் இல்லை. அதுக்கு வேறுஒரு பெயர் இருக்கு. ஸ்கூட்டர் ரிப்பேர் ஆனா அதுவும் ரிப்பேர் ஆகும்.''

நளனுடைய கண்கள் கலங்கின.

''நளன் உங்களை நான் மனதார நேசிக்கிறேன். ஐ லவ் யூ... ஒன்லி ஃபார் யூ. நாட் ஃபார் எ ஸில்லி ஸ்கூட்டர்.''

தமயந்தி சென்று விட்டாள். நளன் செயலற்றுப் போனான்— தாற்காலிகமாக.

---



# ஆன்றோர் வாக்கு!



உலகம் தரும் வாய்ப்புக்களைப் பற்றிக் கொண்டு உலகத்துக்கு மேலாக எழும்பி ஞான நிலையை எய்துவதற்காகத்தான் நாம் உலகில் பிறக்கிறோம்.

-டாக்டர் ராதாகிருஷ்ணன்

'ஏறு அழிஞ்சில்' என்று ஒரு மரம் உண்டாம் அதன் காய் முற்றியவுடன் பூமியில் விழுந்து உடையும். உடனே உள்ளே இருக்கிற விதைகள் ஏதோ ஓர் ஆகர்ஷண சக்தியால் நகர்ந்து நகர்ந்து வந்து மறுபடியும் தாய் மரத்தோடேயே ஒட்டிக்கொள்ளும். ஒட்டிக் கொண்ட பின் மூலமான மரத்துக்குள்ளேயே மறைந்துவிடும் என்கிறார்கள். பகவானிடமிருந்து பிரிந்து வந்திருக்கிற நாம் இப்படியே எப்போதும் பின் பக்கமாக நகர்ந்து நகர்ந்துபோய் முடிவில் அவனிடம் ஒட்டிக்கொண்டு ஒன்றாகிவிட வேண்டும்.

-ஜகத்குரு ஸ்ரீ சந்திர சேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய ஸ்வாமிகள், காஞ்சி காமகோடி பீடம்



நம்முடைய சுதந்திரத்தின் தனிச் சிறப்பு என்னவென்றால் அதன் வெற்றிச் சரித்திரத்தில் கலந்து வந்த பக்தியும் அதையொட்டிய சாத்விகமும். அந்தத் தனிச் சிறப்பை மங்காமல் மறவாமல் நாம் காப்பாற்றி வர வேண்டும். அப்போதுதான் பாரத நாட்டுக்கு உலகத்தில் ஒரு தனிச் சிறப்பு இருக்கும். இல்லாவிடில் மற்றவர்களோடு பின் வரிசையில் பத்தோடு பதினொன்றாக இருக்க வேண்டியதுதான்!

-ராஜாஜி

அதிசயம் தத்துவ ஞானியின் உணர்வு: தத்துவ ஞானம் அதிசயத்திலிருந்தே பிறக்கிறது.

—சாக்ரட்டீஸ்





# டிக். டிக். டிக்

பாரதிராஜா தரப்பு அணி:

தம்மால் ஒரு மசாலாப் படமும் எடுக்க முடியும் என்று பாரதிராஜா நிரூபித்திருக்கிறார்.

எதிர்த்தரப்பு அணி:

கத்தப் பேத்தல் கதை. பாரதி ராஜா எஸ். வி. சேகரின் சமீபத்திய நாடகம் (காதுல பூ) பார்த்து விட்டுக்கதைஎழுத ஆரம்பித்திருப்பார் போலும். எல்லா தர்மங்களும் எல்லா நீதிகளும் தெரிந்த புதுமுக வில்லன் (நிஷாவைக் கொல்லப் போவதாகச் சொல்லிக் குரூரத் துடன் தஞ்சாவூர்ப் பொம்மை மாதிரி கட்டிலில் ஆடு வது புதுமையான வில்லத்தனம்தான்) அழகிகளை வெளி நாடு அனுப்பி அவர்கள் உடலில் அவர்களறியா வண்ணம் ஆபரேஷன் மூலம் வைரம்வைத்து இங்கு வந்ததும் கொலைசெய்து வைரம் பெறுவதுதான் கதையாம். கொலை செய்யாமலே வைரத்தை எடுக்க வேண்டியது தானே! காரணம் இல்லாக் கொலைகளால் கதை தற் கொலை செய்து கொள்கிறது.

பா. அணி:

சொல்வதை எவ்வளவு அழகாகச் சொல்கிறார்! கண்ணன் காமரா எப்படி அட்டகாசம் செய்திருக்கிறது! லாரி கவிழ்வதும், கார் உருள்வதும், வேன் நொறுங்குவதும், கமல் தப்பி ஓடுவதும், டார்க் ரூம் சண்டையும், எவ்வளவு விருவிருப்புடன் எடுக்கப் பட்டுள்ளன.

எ. அணி:

கமல் ஓடுவாராம். 'ஓமன்' பாணியில் துரத்தும் நாய் களால் பிடிக்க முடியாதாம். துப்பாக்கிகள் முழங்குமாம். ஒன்றுகூட கமல் மேல் படாதாம். கிளைமாக்ஸ் வரை கைகட்டுப் போடப்பட்ட கையாலாகாத போலீஸ். கொலைப் பொறியில் சிக்கிய கமலை நகரில் ஒருவர்கூடப் பிடிக்கமாட்டார்களாம். இந்தப் போலி ஆம்புலன்ஸ் சமாசாரம் பார்த்துப்பார்த்துப் புளித்த ஐடியா. பாரதிராஜா படங்களின் இயற்கைத் தன்மை மிஸ்ஸிங்.

பா. அணி:

மசாலாப் படம்னு அது சகஜம்தான். இன்னொரு சிறப்பு அம்சம் இசை—படத்தின் உயிர்நாடியே இளைய ராஜாதான். கைதட்டல் பெருமளவு பல இடங்களில் தனி ஆவர்த்தனத் தட்டல்கள். வாணி ஜெஜன்ஸியோடு லதா ரஜனிகாந்தும் பின்னணி பாட இரண்டு பாடல் கேட்கிற மாதிரி முன்னணியில் வந்து நிற்கிறது.

எ. அணி:

நதிமூலம் மாதிரி இனி இசை மூலம் பார்க்கக்கூடாது தான். மியூஸிக்ல மட்டும் திரில் போதுமா? கதைல ஒரு ஸஸ்பென்ஸ் வேண்டாம்? கதைய நம்பாமதான் மாதவி, ராதா ஸ்வப்னான்னு மூணுபேரையும் குதுங்க வைத்திருக்கிறார். நடித்துக் காட்டச் சொல்வதில் பிற் பகுதிக்கு முக்கியத்வம் தந்திருக்கிறார். 2 × 38 செ. மீ. அளவுள்ள ரிப்பன் துணிகள் இரண்டு மாதவியை அணிந்து கொண்டுள்ளன.

பா. அணி:

மாடல் அழகிகள் என்றால் காஸ்ட்யூம் பத்திப் பேசக் கூடாது. 10 நிமிடம் வந்தாலும் ஆரம்பத்திலேயே அண்ணன் என்று சொல்லிவிட்ட கமலுக்காக ராதா கந்தர் சஷ்டி கவசம் படிக்கிற பாங்கு ஒண்ணே அவர் பத்திச் சொல்லப் போதுமே. ஜைஜாண்டிக் மாதவியின் பெரிய கண்களை அவருக்குக் கை கொடுக் கின்றதை மறுக்க முடியுமா? கமல் பத்திச் சொல்லவே வேண்டாம். ஒரு ப்ரொபஷனல் போட்டோ கிராபர் கூட இவ்வளவு சுறுசுறுப் புடன், தானும் போஸ் கொடுத் துக் கொண்டே போட்டோக்கள் எடுக்க முடியாது.

எ. அணி:

அது சரி. கமல் ஸ்வப்னா வீட் டில் பேண்ட்ஸிப் கையோடு வந்து மாடியிலிருந்து கீழேயிருக்கும் ஒய். ஜி. பி. மீது வெந்நீர் கழித்து... இந்த ரகளை அதிகம். காமெடி ஓவர் டோஸ்.

நடுவர்:

கேமரா, இசை ஒத்துழைப்புடன் ஆங்கில பாணியில் படம் எடுக்கப் பட்டிருந்தும் உயிர் நாடியான கதை இதில் வலுவின்றி, பிடிப் பின்றி உளது. அதனால் பிற சிறப் பம்சங்களும் மங்கிக் காட்சியளிக் கின்றன. தமிழ் ரசிகர்களிடம் யானைப் பசியை உண்டாக்கிய பாரதி ராஜா சோளப் பொரி யைத்தான் தந்துள்ளார்.

காதைக் க'டிக்'கும் கதை.
கண்ணை அ'டிக்'கும் உடை.
உருமாறி வெ'டிக்'கும் இசை.

பாரதி ராஜாவைப் பொருத்த மட்டில், டிக் டிக் டிக் = × × ×

(கடலூர் ரமேஷ் தியேட்டர் கவனிக்க: அடிக்கடி கரண்ட் உயிர் விடுவதால், தன் பணி மறந்த எமர்ஜன்ஸி லாம்பை ரிப் பேர் செய்து வைத்தால் ரசிகர்கள் பாதுகாப்பு உறுதிப்படுமே!)

-நளினி சாஸ்திரி



# குமரிப் பெண்ணே! குயிலானே!

## விமலா ரமணி

### 8

ஞானு வீட்டை அடைந்தபோது வீடு நிசப்தமாக இருந்தது.

நடேச சாஸ்திரிகள்.... ஆமாம்.... அந்த நேரம் அவர் கோயிலில் வேத பாராயணம் சொல்லிக் கொண்டிருப்பார். தினம் ஞானுவும் கூட இருப்பான்.

இன்று அக்கரை போனதினால் அவன் அதில் கலந்து கொள்ள முடியவில்லை. காலையில் பூஜை முடிந்த கையுடன் நடேச சாஸ்திரிகளிடம் சொல்லிவிட்டு அக்கரை கிளம்பி விட்டான்.

சுகன்யா தனியாக இருக்கும்போது அவளைப் பார்த்து இரண்டு வார்த்தை தனியாகப் பேச வேண்டும் என்பதற்காகவே நடேச சாஸ்திரிகள் வேத பாராயணம் பண்ணும் நேரமாகப் பார்த்துத் திரும்பி வந்திருக்கிறான்.

இவன் நினைத்தமாதிரியே சாஸ்திரிகள் கிளம்பிவிட்டார் போலிருக்கிறது. அதனால் தான் சப்தமே இல்லை. முன்னதாகவே வந்திருந்தால் இவனையும் கோயிலுக்கு இழுத்துக்கொண்டு அவர் கிளம்பி யிருப்பார்...

இன்று சுகன்யாவைப் பார்த்துவிட வேண்டும்.... தனியாகப் பேசிவிட வேண்டும்... தன் ஆசைகளை யெல்லாம் சொல்லி..... சொல்லி அவள் முகம் சிவப்பதைப் பார்த்து ரசித்துவிட வேண்டும்.... இன்னும்....

மனத்துள் ஆயிரமாயிரம் ஆசைகள்.... கனவுகள்.....

கோவிலில் இத்தனை நேரம் நடேச சாஸ்திரிகள் ''சுக்லாம் பரதரம் விஷ்ணும்'' என்று பாராயணத்தை ஆரம்பித்திருப்பார்.

ஞானு மெல்ல வீட்டை அடைந்தான்.

திடீரென்று....?

வீட்டின் உள்ளே இருந்து.....?

பேச்சுக் குரல்! சிரிப்புச் சத்தம்! இது நிச்சயம் சுகன்யாவின்குரல்தான்! கூட....கூட கூடச் சிரிப்பது?

ஒரு ஆண் குரல்.

அந்தக் குரல்....

ஞானுவின் நெஞ்சு அடித்துக் கொண்டது.

கொலுசின் சலங்கைகளை ஆட்டி ஆட்டிச் சத்தம் போட்டுச் சுகன்யாவை மகிழ்வில் ஆழ்த்த வேண்டும் என்று நினைத்திருந்தவன், சப்தம் கேட்டுவிடாமல் இருக்க அந்தக் கொலுசை இறுகப் பிடித்தபடி சாத்தியிருந்த கீழ் ஜன்னல் கதவில் கை வைத்தான்.

சரியாகத் தாழ் போடாத ஜன்னல் மெல்ல மெல்லத் திறக்க...

திறந்த அந்த ஜன்னலின் இடுக்கு வழியாக.....?

இரண்டு கால்கள் தெரிந்தன.

கொலுசு போட்ட அழகான கால்கள்!

அன்று முதன் முதலில் அவன் தரிசித்த அதே பாதங்கள்....

இதோ....இதோ அந்தக் கொலுசு பூட்டிய பாதங்களுடன் மற்ற இரண்டு பாதங்கள் இணைந்து.... இணைந்து....

கொலுசு தாறுமாறாக இழுபட.... அதன் சதங்கை நாலாபுறமும் சிதற...

சுகன்யாவின்கால்களின் அந்தக்கொலுசு... நைந்து அழுக்காகிப்போன பழைய கொலுசு...

பாதங்களில் தேய்க்கப்பட்டு அறுந்து போன உடைசல் கொலுசு....

சலங்கைகள்... அதன் அழகுகள் சிதறிப் போக, ஒன்றுக்கும் உதவாமல் நாசமாகிப் போன நல்ல கொலுசு!

வாசல் திண்ணையில் பிரமிப்புடன் உட்கார்ந்து விட்டான், ஞானு!

சுகன்யா.... சுகன்யாவா இப்படி?

நடேச சாஸ்திரிகளின் மகளா இப்படி?

அந்த வேத விற்பன்னரின் ரத்தத்தில் உதித்த சுகன்யாவா இப்படி?

தலையைச் சுற்றியது.

ஞானு அப்படியே சாய்ந்து விட்டான்.

மனம் தெளிய வெளியே உலாவி வரலாம் என்று புறப்பட்டான்.

அவன் திரும்பியபோது...?

வீடே அமர்க்களமாகி யிருந்தது.

அனைவரும் இங்கும் அங்கும் பரபரப்புடன் ஓடிக் கொண்டிருந்தனர்.

கோவிலில் வேத பாராயணம் சொல்லிக் கொண்டிருந்த நடேச சாஸ்திரிகளுக்குத் திடீரென்று நெஞ்சு வலி வந்து விட்டதாம்...

துடிதுடித்துப் போய்விட்டாராம்.

அவரைக் கொண்டு வந்து கூடத்தில் கிடத்தியிருந்தார்கள்.

உடம்பெல்லாம் வியர்வையில் நனைய நெஞ்சு வலியுடன் துடித்துக் கொண்டிருந்தார் சாஸ்திரிகள்.

ஞானு துடித்துப் போய்விட்டான்.

சற்று முன்... இதே இடத்தில்...

அந்த இடத்திலா இந்தப் புனித உடம்பைக் கிடத்தி யிருக்கிறார்கள்! கடவுளே!

சுகுமாரன் நாயர்தான் அக்கரை போய் டாக்டரைக் கூட்டி வரப் போயிருக்கிறானாம்!

இரவு நேரத்தில் செல்லியை அவள் குடிசைக்குப் போய்த் தட்டி எழுப்பிப் பரிசல் ஓட்டச் சொல்லி.....

எத்தனை எத்தனை கஷ்டங்கள்!

கை ஜாடை காட்டி ஞானுவைத் தம் அருகே கூப்பிட்டார் சாஸ்திரிகள்.

அழுதபடி அவர் கையைப் பற்றிக் கொண்டான் ஞானு.



''எனக்கு ஒண்ணுமில்லே.... எல்லாம் சரியாப் போயிடும்.'' — சாஸ்திரிகள் திணறிய படி சொன்னார்.

''உங்க நெஞ்சு வலிக்கு மருந்து கிடைச்சாலும் கிடைக்கும். என் நெஞ்சு வலிக்கு மருந்து ஏது?'' — ஞானு மனத்துள் புலம்பினான்.

அவர் அருகே அழுதபடி உட்கார்ந்திருந்தாள் சுகன்யா.

பாவி! சண்டாளி!

ஞானுவின் கைகளைப் பிடித்த சாஸ்திரிகள் சுகன்யாவின் கைகளுடன் இணைத்து வைக்க முயன்றபோது....?

இருவரும் 'சட்'டென்று சொல்லி வைத்

டார்போலக் கைகளை விலக்கிக் கொண் டார்கள்.

''ஞானு... என்னுடை பொண் சுகன்யா வுக்கு நீதான் கணவன்னு நான் என்னிக்கோ தீர்மானம் பண்ணியாச்சு... அதை... அதை உங்கிட்டே சொல்லச் சந்தர்ப்பமே இது வரை வரல்லே.... இப்பவும் நான் சொல்ல லேன்னு அது ரொம்ப ரொம்பத் தப்பு... சுகன்யாவை உங்கிட்ட ஒப்படைக்கிறேன்... பிள்ளையார் கோவில் பொறுப்பையும் ஒங் கிட்டே ஒப்படைக்கிறேன்.''

சாஸ்திரிகள் திணறினர்.

''புள்ளையார் கோவில் பூஜையைப் பத்திக் கவலைப்படாதேங்கோ... நான் ஏத்துக்கறேன் .....ஆனு......''

''பரவாயில்லே.... சுகன்யாவை நீ கல்யா ணம் பண்ணிக்க இஷ்டப்படலேன்னு வேண் டாம்.... ஆனு அவளுக்குக் கல்யாணம் பண்ணி வைக்க வேண்டிய பொறுப்பை உங் கிட்டே ஒப்படைக்கிறேன்... அதையாவது செய்வியா?''

கை நீட்டித் தன் முன் யாசகம் கேட்கும் பாவனையாக சாஸ்திரிகள் கேட்ட போது ஞானுவால் தாங்கிக் கொள்ள முடியவில்லை.

''மாமா....மாமா.... தெரியாமல் பேச றேனே? நம்மளைச் சுத்தி இத்தனை பேர் இல்லேயானு இங்கேயே விஷயத்தைப் போட்டு உடைச்சிருப்பேனே! சுகன்யாவுக்கு நீங்க கல்யாணம் பண்ணி வைக்க வேண்டிய அவசியமே இல்லே மாமா... அவளுக்குக் காந்தர்வ விவாகம் ஆகி... எல்லாமே ஆயிட் டது.... நல்ல ஒரு பரம்பரை நாசமாப் போய்விட்டது'' என்றெல்லாம் கதறவேண் டும் போலத் தோன்றியது ஞானுவுக்கு. அவன் அழுதபடி அவர் கைகளைப் பிடித் துக்கொண்டான்.

இந்தப் பக்கம் அழுதபடி சுகன்யா அப்பா வின் கரங்களைப் பிடித்திருந்தாள்.

சுகுமாரன் நாயர் டாக்டருடன் அந்த வீட்டில் நுழைந்தான்.

டாக்டரைக் கண்டவுடன், ஞானுவும் சுகன் யாவும் ஆளுக்கொரு பக்கம் விலகியபோது? நடேச சாஸ்திரிகளின் கரங்கள் 'பொத்' தென்று விழுந்தன.

நாடியைப் பார்த்த டாக்டர் உதட்டைப் பிதுக்கினர்.

''அப்பா'' — சுகன்யா அவர் மீது விழுந்து அலறினள்.

ஞானு முகத்தை மூடிக் கொண்டு அழு தான்.

கூடியிருந்த கூட்டம் கதறியது.

யாரோ விவரம் தெரியாதவர்கள் புதிதாக வாங்கிக் கட்டியிருக்கும் கோவில் மணியை இழுத்துப் பார்த்திருப்பார்கள் போலிருக் கிறது.

கோவில் மணி 'ஓம் ஓம்' என்று முழங் கியது.

தீட்டுப்பட்ட சுகன்யா, குளிக்க வேண்டிய சுகன்யா, தன் அப்பாவைக் குளிப்பாட்ட வேண்டிய கட்டத்தில் இருந்தாள்.

பிள்ளையார் கோவில் கதவு சாத்தப் பட்டது.

அடக்கி வைத்திருந்த துக்கம் பீறி ஞானு, 'மாமா....மாமா....'என்று பெரிதாக வாய் விட்டுக் கதறி அழ ஆரம்பித்தான்.

(தொடரும்)

வட்ட மேஜை

# அந்தி நேரத்து உதயங்கள்



● ஒரு பெண் தன்னை ஏற்றுக்கொண்டு தியாகம் செய்யவேண்டும் என்று ஆணிடம் எதிர்பார்ப்பது போல் ஆண்களும் எதிர் பார்ப்பதில் தவறில்லை என்பதை ஹரி நிலை மூலம் நமக்கு உணர்த்தி ஹரியைச் சாந்தி ஏற்றுக்கொள்வதாகவும் ஆசிரியர் சித்திரித் திருப்பது வெகு அருமை.

குரோம்பேட்டை வி. தியாகு

● ஊனமுற்றோர் ஆண்டில் உடல் ஊன மாயினும் உறுதி படைத்த உள்ளம் கொண்ட பாத்திரத்தையும் (ஹரி), பெண்மையை மதிக் கத் தவறிய மன ஊனம் படைத்த பாத் திரத்தையும் (நடராஜன்) 'சாந்தி' என்ற அருமையான அன்பின் பிரதியாய் விளங்கும் பாத்திரத்தையும் படைத்து ஒரு சிறந்த கதையை அளித்துள்ளார் வாஸந்தி.

சென்னை-56 பூவை விமலன்



● தலைப்புக்கேற்ற பொருத்தமான கதை. எதிர்பாராத முடிவுடன் திருப்தியாக முடித்த வாஸந்திக்கு எங்கள் பாராட்டுக்கள். மாருதி யின் ஓவியங்கள் வெகு அருமை!

லெட்சுமாங்குடி ஏ.கே. நாசர்

● போலியான பண்பாட்டுப் பழமையை உதறி, மனசின் பலத்தில் வாழப் புறப்படும் புதுமைப் பெண் சாந்தி, மறக்க முடியாத வள். அவர்களை உருவம் கொடுத்து உலவ விட்ட ஓவியர் மாருதியும், ஜமாய்த்து விட்டார் போங்கள்!

ஸ்ரீரங்கம் ஆர். சீனிவாசன்

● நடராஜ் வந்து அழைத்ததுமே, வாஸந்தி கதையை எப்படி முடிப்பாரோன்னு துடித்துக் கொண்டிருந்தேன். விரும்பியபடியே முடித்து விட்டார் அவர். இறுதியில் ஹரியை யும், சாந்தியையும் இரண்டு நிமிடம் பேச விட்டிருந்தால் என்னவாம்?

காவேரிப்பட்டணம் எம். நளினி

# கிரிக்கெட் டெஸ்ட்:

## வாசகர்களுக்குப் பரிசு ரூ 1500

முதல் டெஸ்டை நீங்கள் நுணுகி ஆராய்ந்து பார்ப்பதற்காக விட்டுவிடுகிறோம்.

இரண்டாவது டெஸ்ட் தொடங்கி ஆறுவது டெஸ்ட் முடிய ஐந்து டெஸ்ட்கள் நடப்பதற்கு முன்னதாக கல்கியில் ஐந்து கூப்பன்கள் இடம் பெறும். இவற்றைப் பூர்த்தி செய்து முடிவு தேதிக்கு முன்னதாக அனுப்பி விடவும். டெஸ்டின் முடிவும் கூப்பனில் உங்கள் முடிவும் ஒத்துப்போனால் ரூ. 100 பரிசு. ஒருவருக்கு மேல் சரியான விடை எழுதினால் பரிசுத் தொகை பகிர்ந்தளிக்கப்படும். ஆக, ஐந்து டெஸ்ட்களுக்கு ரூ. 500 பரிசு.

இதைத் தவிர, ஐந்து டெஸ்ட்களுக்கும் சரியான விடைகளைக் கூப்பனில் பூர்த்தி செய்து அனுப்பினால் சிறப்புப் பரிசு ரூ. 1000. இதிலும் ஒருவருக்கு மேல் வெற்றி பெற்றால் பரிசுத் தொகை பகிர்ந்தளிக்கப்படும்.

கூப்பனில் அடித்தல் திருத்தல் இன்றித் தெளிவாய் எழுதவும். கடிதப் போக்குவரத்துக் கிடையாது. சந்தேகம் எழும் விஷயங்களில் கல்கி ஆசிரியர் தீர்ப்பே முடிவானது. உறையின் மேல் ''கிரிக்கெட் டெஸ்ட்'' என்று அவசியம் எழுதவும்.

**கூப்பன் நெ. 1. டெஸ்ட் 2 (பெங்களூர்) முடிவு தேதி டிசம்பர் 7.**

| கேள்வி | விடை |
|---|---|
| (1) டாஸ் வெற்றி யாருக்கு? (கேப்டன் பெயர் எழுதவும்) | |
| (2) இந்திய அணியில் அதிகபட்ச ரன்கள் எடுக்கப் போகிறவர் யார்? (இரு இன்னிங்ஸூம் சேர்த்து) | |
| (3) இங்கிலாந்து அணியில் அதிக பட்ச ரன்கள் எடுக்கப் போகிறவர் யார்? (இரு இன்னிங்ஸ்களும் சேர்த்து) | |
| (4) இந்திய அணியில் அதிக பட்ச விக்கெட்டுகள் எடுக்கப் போகிறவர் யார்? (இரு இன்னிங்ஸ்களும் சேர்த்து) | |
| (5) இங்கிலாந்து அணியில் அதிகபட்ச விக்கெட்டுகள் எடுக்கப் போகிறவர் யார்? (இரு இன்னிங்ஸ்களும் சேர்த்து) | |
| (7) இரண்டாவது டெஸ்ட்டின் தலைசிறந்த ஆட்டக்காரர் எனத் தேர்ந்தெடுக்கப் படப் போவது யார்? | |
| (7) மாட்ச் ஏதேனும் ஓர் அணிக்கு வெற்றியாக முடியுமா? வெற்றி தோல்வி இன்றி முடியுமா? | |

என் கையெழுத்து: ______________________

பெயர்: ______________________

விலாசம்: ______________________

______________________

______________________

"யாருப்பா நீ?"

"என் பேரு தங்கமணிங்க..."

"என்ன விஷயம்?"

"நான் ஒரு புரவி நாட்டியக்காரனுங்க."

"என்னது?"

"புரவி நாட்டியங்க..."

"அப்படின்னு என்னய்யா?"

"அதாங்க... பொய்க்கால் குதிரை."

"அப்படிச் சொல்லேன். என்னமோ புரவி நாட்டியம்னு பயமுறுத்தறே..."

"நான் இருக்கிறது பக்கத்திலேதாங்க. சாணிக்குளம்... அந்த ஏரியாவிலே என் பார்ட்டிதாங்க நம்பர் ஒன். போன வருஷம் டில்லியிலே நடந்துச்சுங்களே குடியரசு தினம்—அதுக்கு என் பார்ட்டியைத்தாங்க கவர்ன்மெண்ட் அனுப்பிச்சி..." — இதைச் சொல்லிக் கொண்டே ஒரு பழைய பையிலிருந்து ஒரு ஆல்பத்தை எடுத்தான் தங்கமணி. அது, அந்தப் பையை விடப் பழசாக இருந்தது.

எனக்குச் சரியான எரிச்சல். எதற்காக வந்திருக்கிறோம் என்று சொல்லாமல் வெறுமனே கதையளக்கிறான்.

"ஆல்பம் இருக்கட்டுமய்யா.. இப்ப எதற்காக வந்திருக்கேன்னு சொல்லு."

"ஐயாவைப் பார்த்துட்டுப் போகலாமுன்னு...." என்று அவன் பின்னால் திரும்பிப் பார்த்தான். அது என்னுடைய அறை. இப்போது நானும் அவனும் மட்டுமே இருந்தோம்.

அறைக்கு வெளியே ஒரு பெண்ணின் முறையீடு. ஒரு ரௌடியின் கெஞ்சல். ஹெட் கான்ஸ்டபிள் போடும் கூச்சல். போலீஸ் ஸ்டேஷன் என்றால் சும்மாவா!

என் மேஜைக்கு எதிரில் சற்றுத் தள்ளி நின்றிருந்த தங்கமணி, இப்போது மேஜையை நெருங்கி வந்து.. கொஞ்சம் குனிந்து—

"சார்... என் சம்சாரத்தை அந்த மனோகரன் பய கூட்டிக்கிட்டு ஓடிட்டான் சார்..." என்று கலங்கிய குரலில் சொன்னான்.

அந்த போலீஸ் ஸ்டேஷனில் புதிதாக சப் - இன்ஸ்பெக்டராகப் பொறுப் பேற்றிருந்தேன் நான். இன்ஸ்பெக்டர் இரண்டு நாள் லீவு. முழுப் பொறுப்பும் இப்போது என்னிடம். போலீஸ் கமிஷனர் ரவுண்டு வந்து கொண்டிருக்கிறார். என் ஸ்டேஷனுக்கும் வரலாம்.

எனக்கு வந்ததே கோபம்.. "நாயுடு..." என்று கத்தினேன்.

"எஸ் சார்..." என்று உள்ளே நுழைந்தார். ஹெட் கான்ஸ்டேபிள் நாயுடு.

"யாரு இந்த ஆளை உள்ளே விட்டது? காலங்காத்தாலே வந்து தன் பொஞ்சாதி எவனோ... சே... அசிங்கமா இருக்கு..."

நாயுடு என் கோபத்தை வாங்கி அதைத் தங்கமணி மீது பிரயோகித்தார்.

"ஏய்யா... காட்டுப் பூச்சி...சொன்னுக்கேக்கிறியா... ரெண்டு நாளா வந்து உயிரை வாங்குறியே...."



தங்கமணி என்னையும் ஹெட்கான்ஸ்டபிளையும் மாறி மாறிப் பரிதாபமாகப் பார்த்தான். அவன் கண்கள் கலங்கி, கண்ணீர் திரண்டிருந்தது. இன்னும் கொஞ்ச நேரத்தில் அழுதே விடுவான்.

அவனுடைய அவலத்தைப் பார்க்க எனக்கு என்னவோ போலிருந்தது.

''இந்த ஆளை உங்களுக்குத் தெரியுமா நாயுடு?'' என்று கேட்டேன்.

''நம்ம ஏரியாதான் ஸார். சாணிக் குளத்திலே வீடு. எந்த வம்பு தும்புக்கும் போக மாட்டான். இப்ப என்னடான்னு...'' பாதியில் தம் பேச்சை நிறுத்திய நாயுடு தங்கமணியைப் பார்த்தார்.

''ஆமா... நீ சோத்தைத் திங்கிறியா மண்ணைத் திங்கிறியா? பொஞ்சாதி ஊரான் கூட ஓடிட்டான்னு சொல்றதுக்கு உனக்கு வெக்கமா இல்லே?'' என்று பாய்ந்தார்.

தங்கமணி பேசாமல் இருந்தான்.

''அவரு கேக்கிறதுக்குப் பதில் சொல்லுய்யா...'' என்றேன் நான்.

''வெக்கமாகத்தாங்க இருக்கு... ஆனா அதைவிட அவ மேலே எனக்கு நினைப்பு ஜாஸ்தியா இருக்குதுங்களே...'' என்று சொல்லித் தங்கமணி திடீரென்று தன் ஆல்பத்தை மேஜை மேல் வைத்தான். ''நீங்களே பாருங்க சார்.... இவதான் என் சம்சாரம் புஷ்பா... மகாராணி வேஷங் கட்டிக் குதிரையைப் பிடிச்சான்னா, அசல் மகாராணி கூடத் தோத்துடுவா...'' பேசப் பேச அவன் தொண்டை அடைத்தது. பிசிறு தட்டியது.

''நாயுடு! இந்த ஆளை நான் விசாரிக்கிறேன். நீங்க மற்ற வேலையைப் பாருங்க.''

''எஸ் சார்...'' என்று அவர் வெளியில் போனதும், எதிரில் இருந்த ஒரு ஸ்டூலைக் காட்டிதங்க மணியை அமரச் சொன்னேன்.

அவன், சர்க்கஸில் முக்காலியின் விளிம்பில் யானை உட்காருவது போலத் தயக்கத்தோடு உட்கார்ந்தான்.

''ஓடிப்போய் எத்தனை நாளாச்சி?'' என்று கேட்டேன் நான் ஆல்பத்தின் படங்களைப் பார்த்தபடி. சில போட்டோக்களில் பொய்க் கால் குதிரையாட்டம். சில படங்களில் கரகம், காவடி. ஜனாதிபதியோடு, பிரதம மந்திரியோடு எடுத்துக் கொண்ட படங்கள்.

புஷ்பாவின் முகம் நினைவில் நிற்கக்கூடிய முகம்தான். ஆனால் எனக்கு அவளைவிட அவளோடு ஒட்டினாற்போல் நின்றிருக்கும் இவனுடைய முகம்தான் மனத்தில் பதிந்தது. முகத்தில் அப்படியொரு மகிழ்ச்சி – பெருமிதம் – உலகமே தன் காலடியில் கிடப்பதைப் போன்ற இறுமாப்பு.

இப்போது எல்லாம் போய் ஒரு நடைப் பிணம் மாதிரி...

''என்னய்யா... கேக்கிறதுக்குப் பதில் சொல்லாம இருக்கே?'' என்று சற்று உரத்த குரலில் கேட்டேன்.

''ஒரு மாசமாச்சு ஸார்!''

'யாருகூட ஓடிப்போனதாகச் சொன்னே?'

''மனோகரன்... முந்தி என் பார்ட்டியிலே தான் இருந்தான். அப்புறம் தனியாப் பிரிஞ்சு போய்ச் சொந்தமா பார்ட்டி வச்சி நடத்தினான். அப்ப அப்ப ஜோடியா ஆடறதுக்கு ஆள் இல்லேன்னு புஷ்பாவைக் கொஞ்சம் அனுப்பி வை அண்ணாத்தேன்னு கெஞ்சுவான். நானும், நம்ம பார்ட்டியிலே இருந்தவனாச்சே... பொழைச்சிட்டுப் போகட்டும்னு அனுப்பி வைக்கிறதுண்டு... அவன் என்னடான்னா என் வாழ்க்கையிலேயே மண்ணைப் போட்டுட்டான். நேத்து அமாவாசைக்கு முந்தின அமாவாசை அரக்கோணத்துலே ஒரு சேட் கல்யாணத்துக்கு புரோக்ராம்னு சொல்லி புஷ்பாவைக் கூட்டிட்டுப் போனான். திருப்பி அனுப்பலே இல்லே....''

''அவன் அனுப்பலியா? இல்லே... உன் சம்சாரம் வரலியா?''

நாகரிகமில்லாத கேள்வி. ஆனால் அப்படிக் கேட்பது எங்கள் ரத்தத்தில் ஊறிப் போன ஒன்று.

தங்கமணி பதில் பேசாமல் இருந்தான்.

''அந்த மனோகரன் இந்தப் போட்டோ எதிலேயாவது இருக்கானா?''

''இருக்கான் சார்... இதோ...'' என்று நான்கைந்து படங்களைக் காட்டினான் தங்க மணி. எல்லாப் பக்கங்களிலும் புஷ்பாவுக்கு அருகில் 'நான்தான் இவளுக்குப் புருஷன்' என்கிற மாதிரி நெருக்கமாக நின்றிருந்தான் மனோகரன். தங்கமணியை விட அவன் தாழ் [illegible]

''அப்புறம் என்ன ஆச்சு? அரக்கோணத்துக்குப் போன ஒன் சம்சாரம் வரவே இல்லேன்னு சொன்னே...''

''மறுநாள் சாயந்திரம் வரைக்கும் வரலே. தொடர்ந்த மாதிரி ஏதாவது புரோகிராம் வந்திருக்கும்னு நெனைச்சேன்



ஆளு அடுத்த நாளும் வரலே. அப்புறம்தான் எனக்குத் தெரிஞ்சது... கல்யாணம் முடிஞ்ச ராத்திரியே நையாண்டி மேளத்துக்குப் பணத்தைக் கொடுத்து மெட்ராஸுக்கு அனுப்பிச்சுட்டு மனோகரனும், புஷ்பாவும் குதிரை, மற்ற சாமான்களை யெல்லாம் எடுத்துக்கிட்டு எங்கேயோ போயிட்டதாக. நானும் இந்த ஒரு மாசமா தேடாத இடம் இல்லே... கடைசியிலே ரெண்டு நாளைக்கு முந்திதான் தெரிஞ்சது இண்டுக்கல்லே இருக்காங்கன்னு.''

''இண்டுக்கல்லேயா?''

''ஆமாங்க.''

''பாழாப் போச்சு.. என் ஊரு இண்டுக்கல் தான்ய்யா...''

அவன் முகத்தில் திடீரென்று ஒரு மகிழ்ச்சி ஏற்பட்டது. ''அப்ப ரொம்ப நல்லதாப் போச்சுங்க'' என்றான்.

''என்னய்யா சொல்றே?''

''இண்டுக்கல் போலீஸ் இன்ஸ்பெக்டருக்கு நீங்க ஒரு வார்த்தை சொன்னீங்கன்னு... என் பொஞ்சாதியை எங்கூட அனுப்பி வைக்கிறதுக்கு ஏற்பாடு செய்யச் சொல்லி..''

''அவங்க இருக்கிற அட்ரஸ் தெரியுமில்லே.... நேரே போ.. அந்த மனோகரனுக்கு நாலு ஒதை குடுத்து அவ தலை முடியைப் பிடிச்சு இழுத்துக்கிட்டு வா...''

''அவ வரமாட்டா சார்...''

''வரலேன்னு சனியனைத் தலை முழுகிட்டுப் போய்யா...

''என்ன சார் பண்றது? நான் ஒரு கலைஞன் ஸார்...''

எனக்குத் தூக்கி வாரிப் போட்டது.

''என்ன சொன்னே? கலைஞனா?'' என்று அவனை வெறித்தும் பார்த்தேன்.

''ஆமா சார். எவ்வளவுதான் அவ கெட்டவளா இருந்தாலும் அவ எனக்கு வேணும் சார்... அப்பத்தான் சார் என்னோட கலை பரிமளிக்கும்... இல்லேன்னு என்னாலே ஆட முடியாது சார்... ஆட முடியாது சார்...'' என்று விம்மி விம்மி அழத் தொடங்கினான் தங்கமணி.

திடீரென்று டேபிளின் ஓரமாக வந்து என் கால்களைப் பிடித்துக் கொண்டான்.

---

அவன்: ''உங்க பத்திரிகையில் சமையல் குறிப்புகள் வெளியிடறதை உடனடியா நிறுத்தித் தொலைங்க!''

ஆசிரியர்: ''ஏன்?''

அவன்: ''என் மனைவி ஒவ்வொன்றையும் சமைத்துத் தரச்சொல்லி என் உயிரை எடுக்கிறா!''

- உ. ராஜாஜி



என்றால் அவனை வெறுத்து ஒதுக்க முடியவில்லை.

திண்டுக்கல் வந்து சேர்ந்தோம். போலீஸ் ஸ்டேஷனில் மற்ற எல்லோருமே பழசு. இன்ஸ்பெக்டர் மட்டும் புதுசு. என்னை அறிமுகப்படுத்திக் கொண்டதும் சில நிமிடங்களில் ரொம்ப நாள் பழகின மாதிரி ஆகிவிட்டார். பிறகு தங்கமணி விஷயத்தைச் சொன்னேன்.

அவருக்கு என்னவோ போல் இருந்தது. தங்கமணியை அருவருப்போடு பார்த்தார். ஏதோ கேட்க வாயெடுத்தார். அதற்குள் நான் குறுக்கிட்டேன்.:

''நீங்க என்ன கேட்கப் போறீங்கன்னு எனக்குத் தெரியும். அதையே நானும் பல தடவை கேட்டுட்டேன். அந்த ஆளோட ஒரே பதில் அவன் கலைஞனாம்.'' என்றேன்.

''அப்படீன்னா?'' என்று அவர் வினாக்குறியாக என்னைப் பார்த்தார்.

''கலைஞர்களுக்கு மனசு எதை விரும்புதோ அது வேணும்... மற்றதெல்லாம் அப்புறம் தான்.''

''மண்ணாங்கட்டி....'' என்றார் அவர் வெடுக்கென்று. ''பொய்க்கால் குதிரை ஆளுங்க நிறையப் பேரை நான் பார்த்திருக்கேன். மனைவி மக்களோட லட்சணமா குடும்பம் நடத்தறாங்க. இந்த ஆளு ஏதோ ஓடுகாலியைக் கட்டிக்கிட்டு... ஏன் மேன்... அப்படி அவகூட மறுபடியும் குடும்பம் நடத்தணும்கிறது என்ன தலை விதியா?''

''ஆமாங்க...'' என்றான் தங்கமணி கூசாமல்.

''என்ன ஆமாங்க?''

''கெட்டவங்க எங்க தொழில்ல மட்டுமில்லே.... சினிமா–டிராமாவிலே நடிக்கிறவங்க – பாடறவங்க எல்லாத்திலேயும் இருக்காங்க... இருந்தாலும் ஒருத்தர் கெட்டுப் போனாலும் ஒருத்தர் அனுசரிச்சிக்கிட்டுப் போறாங்க... பொதுவா கலைஞர்களுக்கே இது ஒரு வீக்னஸ்ஸுங்க...''

அந்த இன்ஸ்பெக்டருக்கு வாயடைத்துப் போய்விட்டது.

''அட்ரஸ்ஸைச் சொல்லுய்யா... யாரை யாவது அனுப்பி அவங்களைக் கூட்டியாரச் சொல்லலாம்'' என்றேன்.

பர்சுக்குள் பத்திரமாக வைத்திருந்த ஒரு துண்டுச் சீட்டை எடுத்துத் தந்தான் தங்கமணி. அதை எடுத்துக் கொண்டு ஒரு கான்ஸ்டபிள் போனார்.

போனவர் ஒரு மணி நேரம் கழித்துத் திரும்பி வந்தார். ''வையம்பட்டி மாரியம்மன் திருவிழாவிலே ஆடறதுக்குப் போயிருக்காங்களாம்'' என்றார்.

தங்கமணிக்கு மெய் சிலிர்த்ததோ என்னவோ ''திருவிழா புரோக்ராமா? அப்படீன்னு நீங்க ரெண்டு பேரும் கட்டாயம் வந்து அவ ஆட்டத்தைப் பார்க்கணும் சார்'' என்றான்.

''இது வேற தலைவலியா எங்களுக்கு?''.

நாங்கள் வையம்பட்டிக்கு வந்தபோது இரவு பத்து மணி.

அம்மன் உலா வந்து கொண்டிருந்தான்

அதற்கு முன்னால் குதிரைகள் நடை போட்டு வந்தன.

''சார்...சார்...சார்... கொஞ்சம் நிறுத்துங்க சார்...'' என்றான் தங்கமணி. ஜீப்பை நிறுத்துவதற்கு முன்னால் பின்னாலிருந்தவன் குதித்தான். முன்புறமாக எங்களிடம் வந்தான். அவன் இயக்கத்தில் ஒரு வேகம் இருந்தது.

''அதோ பாருங்க சார்... குதிரையிலே வர்று பாருங்க... அவதான்...அவளேதான்'' என்று பதறினான் அவன்.

''கொஞ்சம் நிதானமா இருய்யா. அவ சரப்பட்டு அசிங்கப்படுத்தி விடாதே'' என்றேன் நான்.

''வாங்க சார் போகலாம்....''

''எங்கே?''

''பக்கத்திலே போய்ப் பார்க்கலாம் சார். மண்டகப்படி போட்டு ஆடுவாங்க... அவ ஆட்டத்தைப் பார்த்து ரொம்ப நாளாச்சி... வாங்க சார்....''

வேறு வழியில்லை. இறங்கி அவனோடு போனோம். பாதி வழியில் உடுத்தியிருந்த வேட்டியை அவிழ்த்து முக்காடு போட்டுக் கொண்டான் தங்கமணி. அரை நிஜார் மட்டும்தான்.

உருவிய வாளோடு ஆடிக் கொண்டிருந்தாள் புஷ்பா.

''என்னய்யா இது கத்தி கபடா எல்லாம்? ஒன் தலையைச் சீவப் போறாளா?'' என்று கேட்டேன் சிரித்துக் கொண்டே.

''ஜான்ஸி ராணி வேஷம் கட்டியிருக்கா சார்....''

''இது வேறேயா?''

''இப்பத்தான் சண்டைக்குப் புறப்படறா. இனிமேத்தான் சண்டை சீன் நடக்கும்...'' என்று தங்கமணி சொல்லிக் கொண்டிருந்த போது—

மேளத்தின் தாளகதி மாறித் துரிதமாக இயங்கியது. புஷ்பாவின் ஆட்டமும் அதற்கேற்றாற்போல் மாறியது.

''போச்சி... தாளம் தப்புது...'' என்றான் தங்கமணி.

''என்னய்யா சொல்றே?''

''தாளம் தவறுது சார் அவளுக்கு...''

''அப்பஎன்னு?''

''ஸ்டெப்ஸ் சரியா வரலே... தாளம் தவறுது'' என்று கூறியவன் ''அடிப் பாவி கழுதே!... ஒழுங்கா ஆடு'' என்று அடங்கிய குரலில் கத்தினான்.

ஆனால் எனக்கு ஒரு வித்தியாசமும் தெரியவில்லை. இதற்குள் நின்ற இடத்திலிருந்து நிலைகொள்ளாமல் தவிக்க ஆரம்பித்து விட்டான் தங்கமணி. ''கன்றாவி... கன்றாவி... சாணி மிதிக்கிற மாதிரி...'' என்று ஏதேதோ உளறினான்.

''நல்லாத்தானே ஆடுறா...'' என்றேன் நான்.

''ஒங்களுக்குத் தெரியாது சார். கால் எடுப்பும் தொடுப்பும் ஒத்து வரலே. மாத்திரை தள்ளிப் போகுது... தாளம் தவர்றது எங்க ஞானத்துக்குத்தான் தெரியும்.''

''இப்ப அதுக்கு என்ன பண்ணணுங்கிறே?''

''வாங்க சார் போகலாம்.''



''எங்கே?''

''திண்டுக்கல்லுக்கு... ராத்திரி பஸ் இருந்தால் நான் மெட்ராஸ் திரும்பிடறேன்...'' என்று கூறியவன் மீண்டும் புஷ்பா ஆடுவதைப் பார்த்தான்.

''பாருங்க ஸார்.... இவ்வளவு நேரமா தாளம் தவறி ஆடறதை அவளும் உணரலே. அந்தத் தடிப் பயலுக்கும் தெரியலே. ஞானங் கெட்ட கழுதைங்க... ஒரு நிமிஷங்கூட இதுக மூஞ்சிகளைப் பார்க்கக் கூடாது...''

''அவளை மெட்ராசுக்குக் கூட்டிக்கிட்டுப் போறதுக்குத்தானே ஐயா வந்தே?'' என்றேன் கிண்டலாக.

''இவளையா? தொழில்லேநாட்டமில்லே... கலையிலே ஆர்வமில்லே... தாளம் வேறே தவறுது....''

''அது பெரிய தப்பா?''

''என்னைப் பொறுத்த மட்டிலே அது தப்பு சார்.... ஒழுக்கம் தவறினவளோட நான் வாழத் தயார். ஆனா தாளம் தவறி ஞானம் கெட்டவளோட வாழறதுக்கு நான் விரும்பல்லே...'' என்று தங்கமணி சொன்னானே பார்க்கலாம்.

நானும் நண்பரும் திகைத்துப் போனோம். இவன் மனிதனா? அல்லது துளிக் கூட மனிதனாக இல்லாத ஒரு முழுக் கலைஞனா?

''என்ன சார்... நீங்க வர்றீங்களா நான் போகட்டுமா?''

''கொஞ்சம்பொறுதங்கமணி...வந்ததுக்கு அம்மனுக்கு ஒரு அர்ச்சனை பண்ணிட்டு...''

''அப்ப நீங்க வேணும்னா இருங்க ஸார். நான் போறேன்... வர்றேன் சார்...'' என்று எங்கள் பதிலுக்குக் காத்திராமல்—

ஏதோ ஆவேசம் வந்தவன் போல் அந்தச் சாலையில் தன்னந் தனியாய் நடந்து இருளில் ஐக்கியமாகிக் கொண்டிருந்தான் அந்தக் கலைஞன்.

# சுவர்ணமுகி

## ஸ்ரீவேணுகோபாலன்

மந்திரிசபையில் ஏதாவது ஒரு மந்திரி அரசருக்கு எதிராக எதிர்க்கருத்தைத் தெரிவித்தால் அதன்பின் னால் என்ன நோக்கம் இருக்கிறது என்பதை அரசர் ஆராய வேண்டும். -ஆமுக்தமால் யதா

**35**

சுவர்ணமுகி அந்தக் குதிரை வீரனை நினைத்துக்கொண்டு பிரயாணம் செய்தாள்.

அந்தப்புரவாசிகள் எல்லோரும் ஆறு பல் லக்கில் நெருக்கி அடித்துச் சென்றார்கள்.

முன்னிரவுகளிலும் பின்னிரவுகளிலும் மட் டும் பயணம் செய்தார்கள். பிரதானமான பாட்டைகளை விட்டு, சுற்று வழியான சிறு சிறு சாலைகளில் அவர்கள் கவனமாகச் சென்றார்கள்.

எங்கேயாவது தண்டு இறங்கும்போது சுவர்ணமுகிக்கு ஓடிவிடலாம் என்று தோன் றும். அல்லது உயிரை மாய்த்துக்கொள்ள லாமா?

வளர்ப்புத் தந்தை ரங்கப்பா சொன்னதை அப்போது நினைவுகூர்வாள். ''எந்தக் கார ணத்தைக் கொண்டும் உயிரை மாய்க்காதே! வம்சம் தழைக்க வேண்டும்!''

சொந்தத் தந்தை இம்மாடி ஸ்ரீரங்க மகா ராஜாவைப் பார்க்கா விட்டாலும், அவர் சொன்ன வார்த்தைகளைப் பத்திரமாக யாரோ ஏட்டில் எழுதி அவளது வளர்ப்புத் தந்தையிடம் கொடுத்திருந்தார்கள்.

''என் இரு குழந்தைகளையும் எனது வம் சம் எப்படியாவது தளிர்க்க வேண்டும் என் பதற்காக எவ்வளவோ ஆபத்து இருந்தும் தப்பிக்க வைத்து வெளியே அனுப்புகிறேன். ராஜ்யத்தை அனுபவிக்க விடாமல் பாபிகள் என்னைச் சிறை வைத்து விட் டார்கள். எப்படியும் என் சந்ததி யார் இந்த ராஜ்யத்தை அடைய வேண்டும் என்பதற்காகவே என் குழந்தை களை வெளியே தப்பிக்க வைக்கிறேன். அவர்கள் பொறுப்பாக வளர்ந்து இந்த ராஜ்யத்தை அடைவதையே இலட்சிய மாகக் கொள்ள வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.''

ஆமாம், தந்தைதான் இப்படிக் கேட்டுக் கொண்டிருக்கிறார்.

அவளுடன் தப்பித்த அண்ணன் ராம தேவன் பல இன்னல்களிடையே ராஜ் யத்தை அடைந்து சிறிது காலம் பரிபாலனம் பண்ணினான். ஆனால் அவன் சந்ததி இல்லா மல் இள வயதில் இறந்துபோக, சற்றுத் தூரத்து உறவினரான இந்த வேங்கடராஜா வுக்கு ராஜ்யம் போயிருக்கிறது. இவரிட மிருந்து ராஜ்யம் சுவர்ணமுகிக்கோ, அவளது சந்ததியாருக்கோ வந்தால் மீண்டும் பழைய பரம்பரை வம்சாவளிக்கு ராஜ்ய பரிபாலனம் வந்துவிடும்.

இவ்விதமெல்லாம் தீர்க்கமான யோசனை பண்ண, தற்கொலை என்ற எண்ணம் தப்பித மானது என்பதை அவள் புரிந்து கொண் டாள்.

ஆனால் வந்திருக்கும் கஷ்டங்களையும் சங் கடங்களையும் நினைத்தால், வாழ்க்கையை விட வாழாமை இன்பமாக இருக்கும் போல் இருக்கிறதே!

வருத்தமுடன் நினைவுகள் வர, மனம் சோர்ந்து கண்ணீர் அடிக்கடி துளும்பியது. சிறிது நேரம் கசிந்து கண்ணீர் உகுத்த பிறகு, மனம் கொஞ்சம் தெளிவு பெற்றது. அப் போது.

''அப்பா, எனக்கு அடிக்கடி சோர்வு வந்து அயர்கிறேன். எனினும் தாங்கள் விரும் பியதை மறக்க மாட்டேன்! அதையே லட்சியமாக வைத்திருக்க எனக்குப் பலம் கொடு'' என்று பிரார்த்தனை புரிந்தாள்.

ராஜகோஷ்டி ஆறுமுக புரத்தில் தங்கியி ருக்கும்போது, செய்தி வந்தது.

செய்தியைக் கொண்டு வந்த அதிகாரிகள் அந்தக் கோஷ்டியைக் கண்டு பிடிக்க மிகவும் சிரமப்பட்டிருந்தார்கள்.

தவறான பாதையில் சென்று, அல்லல் பட்டு, ராஜ கோஷ்டியைக் கண்டுபிடிக்க மார்க்கமில்லாமல் அலைந்து.

கடைசியில் அதிர்ஷ்டவசமாக ஒருகோவில் பூசாரி கொடுத்த செய்தி பேரில் ஆறுமுக புரத்துக்குவந்து கண்டுபிடித்து விட்டார்கள்.

இம்மராஜா கொல்லப்பட்டதையும், அவ ரது படைகள் முறியடிக்கப்பட்டதையும் அறிந்த வேங்கடராஜா மிகவும் சந்தோஷப் பட்டார்.

செய்தியைக் கொண்டுவந்த அதிகாரி களுக்கு இரண்டு வைர ஆபரணங்களையும் பட்டு வஸ்திரங்களையும் பரிசிலாக அளித் தார்.

லிங்கம நாயகர் செய்தியை நம்ப முடி யாமல் தத்தளித்தார். செஞ்சி கிருஷ் ணப்ப நாயகர் இரண்டாயிரப் படையை உதவினார் என்பதை நம்ப வில்லை. அதுவும் அந்தப் படைகள்





திம்ம ராஜாவின் ஐம்பதாயிரப் படைகளை வென்றது என்று சொன்னால் யார் நம்புவார்கள்? ஒரு இரண்டாயிரத்தை வைத்து இந்தத் தீரங்கள் செய்தால் அதன் தளபதி யார்? எப்படி இந்த அதிசயத்தைச் செய்தார்கள்?

வேலூர் இனி அதோகதி என்று நினைத்திருந்தார். முற்றுகையின் கடைசி நாள் இரவு ஜனங்கள் அடங்காப் பிடாரிகளாகப் போய்விட்டார்கள். ராஜாவையும் மதிக்கவில்லை. ராஜ சைன்யத்தையும் மதிக்கவில்லை. தாங்களே கோட்டைக் கதவைத் திறக்கச் சித்தமானார்கள். இதைப் போன்ற எழுச்சியை அவர் எந்தக் காலமும் பார்த்ததில்லை. இப்படி கோட்டையின் உட்பக்கம் தாறுமாறாக இருக்க, நிச்சயம் வேலூர்க் கோட்டை அழிந்தது என்று நம்பினார்.

இப்போது எல்லாம் தலைகீழாக நடந்திருக்கின்றனவே!

எல்லோரும் சேர்ந்து இனி நடக்க வேண்டியவைகளைப் பேசியபோது, லிங்கமர், ''இனியும் மகாராஜா வேலூரில்தான் இருக்க வேண்டும்'' என்றார்.

''இல்லை! சந்திரகிரிக்குப் போவதுதான் சரி!'' என்று தாமர்ல சகோதரர்கள் கூறினார்கள்.

வேங்கட மகாராஜாவும் ஒத்துக்கொள்ள, ராஜ கோஷ்டி முன்பு போல் ஒளிந்து செல்லாமல் வெகு விமரிசையுடன் ராஜ பாட்டையில் செல்ல ஆரம்பித்தது.

சந்திரகிரி!

அநேகமாக மக்களாலும் மன்னராலும் கைவிடப்பட்டிருந்த அந்த மலை நகரம் தனது சோபையைப் பல மாதங்களாக இழந்திருந்தது.

ஏற்கனவே வருஷக்கணக்கான பஞ்சத்தில் பாதி. கபிட்சத்தை இழந்திருந்தது.

இப்போது அதைப் பார்ப்பதற்கு நெடுநாள் படுத்திருந்த நோயாளி போல் சோகை பிடித்து வெளிறித் தெரிந்தது.

வேங்கட மகாராஜா அந்த நகரில் நுழைந்தபோது, பூமி பூஜையும், கோட்டை தேவதை பூஜையும் செய்தார்.

உள்ளே நெளிந்த பாதையில் சென்று காளி கோவிலில் கும்பிட்டார். பிறகு வீதிகளில் போனபோது கண்ணீர் பெருகியது.

வீதிகள் களையிழந்து கிடந்தன.

மனிதர்களே துர்லபமாகத் தென்பட்ட தரையில் புழுதியும் சேத்தையும் குவிந்து கிடந்தன.

அரண்மனை சென்று நேராக உப்பரிகை மாடத்திற்குச் சென்று, நேராகத் திருப்பதி மலையை நோக்கினார்.

சந்திரகிரி காட்டுக்கும் பள்ளத்தாக்குக்கும் அப்பால் அந்த ஏழு மலைகள் நீல நிறமாய்த் தெரிய,

நேர் எதிரே இருந்த மலைச் சிகரத்தில் அவர்கள் முன்னோர்கள் கட்டிய கண்டா மண்டபம் தெரிந்தது.

திருப்பதிப் பெருமான் உணவு அருந்திவிட்டார் என்பதைக் கோயில் பெரிய மணி கண்டா மண்டபத்துக்கு அறிவிக்க.

மண்டபத்தில் இருக்கும் பெரிய வெண்கல மணியை அடிப்பதன் மூலம் அந்தச் செய்தியை ஊழியர்கள் சந்திரகிரிக்கு அனுப்பினார்கள்.

அன்று அவர் வந்து நிற்பதற்கும் காலை நைவேத்தியம் முடிந்து மணி ஓசை கேட்பதற்கும் சரியாக இருந்தது.

அதையே சுபசூசகமாக எடுத்துக் கொண்டார் அவர்.

ஒரு வாரம் வரை அரண்மனையிலும் நகரத்திலும் சீரமைப்பு வேலை நடந்தது.

மழையும் பெய்து, ராஜ்ய எதிரிகளும் ஒழிந்து விட்டபடியால், மக்கள் சின்னச் சின்னக் கூட்டங்களாகச் சந்திரகிரிக்கு வந்து கொண்டிருந்தார்கள்.

ஒரு வெள்ளிக் கிழமைவேங்கடராஜாவுக்கு புனர் மகுடாபிஷேகமும், சிங்காதனச் சாந்தியும் நடைபெற்றன.

மகாராஜா தமது தளவாய்களையும் தளபதிகளையும் வரவேற்று பரிசில்கள் வழங்கினார்.

அநேக குறுமன்னர்கள் வந்திருந்தார்கள்.

அர்ச்சன தேவனை அழைத்து, அவனது வீரத்தைப் பாராட்டி நாராயணவனச் சீமையை அவனுக்குப் பரிசிலாக அளித்த போது, சபையில் எல்லோரும் ஆரவாரம் செய்தார்கள்.

அர்ச்சனத் தேவனுக்கு மகுடமும், வீரவாளும், மார்பு ஆரமும் வெண் பட்டு அங்கியும் கொடுத்துக் கௌரவித்தார் மன்னர்.

இவற்றைத் தரித்து அர்ச்சனன் திரும்பி வரும்போது அசல் ஒரு ராஜாவைப் போலவே காட்சி தந்தான்.

பாடல், ஆடல், கேளிக்கைகளுடன் சீக்கிரம் சபை கலைந்தது.

மாலையில் தன் மாளிகைக்குத் திரும்பிய அர்ச்சனனுக்கு இன்பமும் துன்பமும் கலந்திருந்தது.

---

**விடைகள் :**

1. (இ) திருவாசகம்., திருவாசகத்துக்கு உருகாதவர் ஒரு வாசகத்துக்கும் உருகமாட்டார் என்பது வழக்கு. திருவாசக நூற் பெருமை சொல்லும் வெண்பாவின் ஈற்றடியே 'திருவாசகம் என்னும் தேன்' என அமைகிறது.
2: (ஈ) நரகம்
3. (அ) செவ்வாய்
4. (ஆ) பிரான்மலை
5. (இ) பஃறுளியாறு
6. (ஆ) கும்பகர்ணன்தான். ஏற்கெனவே சரணாகதி அடைந்துவிட்ட விபீஷணனைப் பார்த்துச் சொன்னது இது.
7. (இ) நாகம்
8. (ஈ) பரல் என்கிற முத்து இத்தாலியில் 'பெர்லா' ஆகி, ஆங்கிலத்தில் 'பேர்ல்' ஆனது என்பார்கள்.
9. (அ) 398
10. (இ) தம்பலப் பூச்சி. பட்டுப் போல் மென்மையான இதை மழை நாட்களில் காணலாம்.

| | | |
|---|---|---|
| மதிப்பீடு: பத்தும் சரியானால் | — | அற்புதம் |
| 6 முதல் 9 | — | அருமை |
| 3 முதல் 5 | — | மகிழலாம் |
| அதற்கும் கீழே | — | சோகம் |

அமைப்பு: 'வெஸ்பால்'

ஒரு சீமைக்கு அதிபதியாக அவன் மாறுகிறான்.

இது அவனது அன்னைக்குத் தெரிந்தால் பெரிதும் சந்தோஷப்படுவாள். போய்விட்டு வரவேண்டும்.

அதற்கு முன் இன்னொரு முக்கிய வேலை! ஆரம்கானுக்குப் போக வேண்டும். அது ஆங்கிலேயரால் தோற்றுவிக்கப்பட்ட சின்ன வர்த்தக நகரம். ஆறுமுகம் என்பவரிடமிருந்து அந்த இடத்தை வாங்கியதால் அந்தப் பெயரை உச்சரிக்கத் தெரியாமல் ஆரம்கான் என்றார்கள்.

அங்கே' பிரான்ஸிஸ் டேயும், ட்ரேக்ராஜரும் இருந்தார்கள். அவர்களிடம் போய் நன்றியைச் சொல்ல வேண்டும்.

எத்தகைய பண்பாடு அவர்களுக்கு! யுத்தத்தில் வெற்றி பெற்றோம் என்று தெரிந்தவுடன் அர்ச்சனனிடம் படையையும், பொறுப்பையும்கொடுத்துவிட்டுச் சுவடு தெரியாமல் மறைந்து விட்டார்கள்.

அதை அடுத்த முக்கிய விஷயம் சுவர்ணமுகி!

அந்த இளவரசி எங்கே?

எங்கே அவள் போனாள்?

அல்லது யாராவது அபகரித்து விட்டார்களா?

வேலூரைப் பிடித்த பிறகு முதல் விஷயமாய் அவளைத் தேடித்தான் எங்கும் ஆட்களை அனுப்பினான்.

அவனே பல இடங்களுக்குச் சென்று தேடினான்.

சுவர்ணமுகி தங்கியிருந்த மாளிகையில் வேலைக்காரர்களைக் கேட்டபோது, அவளும் ஸ்ரீரங்கனும் இரவில் வெளியில் போனார்கள் என்றும் பின்னர் திரும்பி வரவேயில்லை என்றும் கூறினார்கள்.

ஒருவேளை ஸ்ரீரங்கனே அவளை அபகரித்துச் சென்றிருப்பானோ?

சண்டையின்போது ஸ்ரீரங்கன் என்ன ஆனான் என்று தெரியாது.

இங்கே சந்திரகிரிசபைக்கு வருவான் என்று எதிர்பார்த்தால் அதுவும் வரவில்லை.

மகாராஜாவின் மீது உயிர் விடுபவன் ஆயிற்றே! என்ன ஆனான்?

இரவில் அர்ச்சனனுக்கு இருப்புக் கொள்ளவில்லை. சுவர்ணமுகி அடிக்கடி நினைவில் வந்தாள். எங்கேயோ ஆபத்தில் அவள் இருப்பதாகவும், அவன்தான் அவளைக் காப்பாற்றச் செல்ல வேண்டும் என்றும் கற்பனை செய்தான்.

இரவு உணவு அருந்தியதும் அதிகாரிகள் வந்து 'மகாராஜா அவசரமாக அழைக்கிறார்' என்று அவனை அழைத்துப் போனார்கள்.

அர்ச்சனன் பரபரப்புடன் புறப்பட்டான். அரண்மனை முகப்பில் நுழைந்ததும் அவனை அறியாமல் உடலில் ஒரு படபடப்பு ஏற்பட்டது.

மகாராஜா எதற்காக அழைத்திருப்பார் என்று நினைத்தான்.

உள்ளே போய் அரண்மனைக் காரியத்தை விசாரித்ததில் மன்னர் தமது வசந்த மாளிகையில் இருப்பதாகக் கூறினார்கள்.

கூடங்களைக் கடந்து, தாழ்வாரம் தாண்டி நிலா முற்றத்துக்கு வர,

ஏதோ ஓர் இனமில்லாத சக்தி அவன் பார்வையை மேலே ஆகர்ஷித்தது.

மேலே எல்லாம் ராணிகளின் மாடங்கள் என்று அவனுக்குத் தெரியும்.

பொதுவாக அந்த நிலா முற்றத்துக்கோ வசந்த மாளிகைக்கோ மிகவும் நம்பகமானவர்கள்தான் அனுமதிக்கப்படுவார்கள்.

இங்கே தனியனாய் அவன் செல்ல, அவன் பார்வை மேலே ஆகர்ஷிக்கப்பட, எதேச்சையாகப் பார்த்தான்.

அடுத்த கணம் அவன் பாதங்கள் தரையில் பாவவில்லை. திடீரென்று ஒரு புயல் அவனைத் தாக்குவது போல் இருந்தது.

மேலே நீளமான மாடத்தில், தீவர்த்தி ஜ்வாலைகளில் அவளும் ஜுவாலையாக சுவர்ணமுகி கீழே பார்த்துக் கொண்டிருந்தாள்.

அவள் விழிகள் கார்கால மழை போல் அவன் விழிகளில் குளுமையாக வந்து இறங்கின.

வியப்பில் இரு உதடுகளும் பிரிந்திருக்க, குழந்தையின் வாயில் உலகத்தைப் பார்த்த யசோதாவும் அப்படித்தான் ஆச்சரியத்தில் உதட்டைப் பிரித்திருப்பாள்.

அவள் முகம் ஒரு நிலவுக் கதிராகத் தெரிய, மாடத்தில் எழுதிய சித்திரமாக அவள் அசைவு எதுவுமில்லாமல் சமைந்து நின்றாள்.

அர்ச்சுனனுக்கு உணர்ச்சி தாளவில்லை. வழக்கமாக அவன் மாடத்தைப் பார்க்கவும் மாட்டான், பெண்களை ஏறிடவும் மாட்டான். இங்கே விதிவிலக்காக நின்றான்.

அவன் உயிர்க் கருவிலிருந்து உற்பத்தியாகிய சுவர்ணமுகி என்ற அழைப்பு, நுனி நாவரை வர, அவளது பக்கத்தில் பல பெண்மணிகளும் இருக்கிறார்கள் என்பதை உணர்ந்து அப்படியே உறைந்து நின்று விட்டது.

அவள் பார்ப்பதுகூட அவ்வளவு முறையல்ல என்று ஏதோ ஓர் உணர்வு அவனிடம் கூறியது.

எனினும் பார்வையைத் திரும்பப் பெற இயலாதவனாய் அவன் நிற்க,

சுவர்ணமுகி சட்டென்று தன் முகத்தைத் திருப்பினாள். பிறகு அரைக் கணம் கூடத் தரியாமல் உள் நோக்கி அவள் போக,

அர்ச்சுனன் திடீரென்று ஓர் ஏமாற்றத்துக்கு ஆளாகி, பார்வையைக் கீழே தாழ்த்தினான். அதற்குள் தெப்பமாக அவன் ஆடைகள் நனைந்து விட்டன. அவன் கண்கள் ஒரு கடல் கவிழ்ந்தாற்போல் நீரைச் சொரிந்திருந்தன. பலகணங்கள் வரை அவன் முன்னால் ஒரே இருட்டு! எதுவும் தெரியவில்லை! அவனுக்கு எந்த உணர்வும் இல்லை.

காரணம் காரியம் எதுவும் தெரியாத ஒரு நிலைகுலைதலில் அவன் ஆழ்ந்திருக்க,

இரண்டு சேவகப் பெண்மணிகள் ஓடி அவன் கைகளைப் பிடித்துக் கொண்டு, ''என்ன சுவாமி என்ன? தங்களுக்கு ஏதாவது நேர்ந்ததா?'' என்று ஆதங்கத்தோடு கேட்க,

கைகளை அவன் விடுவித்துக் கொண்டு, ''எதுவுமில்லை. நான் வருகிறேன்'' என்று குனிந்தவாறு சொன்னான்.

அவன் குரல் அவனைக் காட்டிக்கொடுத்தது. அதிலிருந்த துயரமான கரகரப்பு அவளையும் மீறி உற்பவித்திருந்தது. விறுவிறுவென்று நடந்தான். (தொடரும்)



''பத்திரிகையிலிருந்து பணம் வந்ததும் என் மனைவிக்கு அதில் பாதியைக் கொடுத்துடணும்!''

''ஏண்டா?''

''இல்லாட்டா எந்த பத்திரிகையிலிருந்து காப்பி அடித்தது என்று வாசகர் கடிதத்தில் எழுதி விடுவாள்!''

- பி.ஆர்.கே.

கப்பலின் எடை பௌர்ணமி சமயத்தில் பகல் நேரத்தைவிட இரவில் குறைகிறது. காரணம் நிலவின் புவி ஈர்ப்பு சக்தி. அதனாலேயே முழுநிலவு (இரவு) நேரத்தில் கப்பலின் எடை குறைகிறது.

ஆதாரம்: விஸ்டம் - திசை முத்து



# இவர்கள்







✖ கே. மனோகரன்
✖ கே. ரவீந்திரன்
✖ ✖ அனிதா ஸூட்

எல்லாவற்றையும் அரசுடைமையாக்கிய பண்டார நாயகா ஆட்சி கொள்கைக்கு மாறுபட்டதான புதிய கொள்கையை இன்றைய ஜயவர்த்தன ஆட்சி இலங்கையில் கையாள்கிறது. தனியார் துறைக்கும் முக்கிய இடமளிக்கும் கலப்புப் பொருளாதாரக் கோட்பாடு தீவிரமாக அமல்படுத்தப்படுகிறது.

உலகப் பிரசித்தி பெற்ற கத்ரீ கார்ப்பரேஷனுடனோர் ஒப்பந்தம் சமீபத்தில் செய்து கொண்டிருக்கிறது. இதன்படி மகாவலி கங்கை தீரத்தில் 24,000 ஏக்கரா நிலத்தில் செம்பனை பயிரிடப்படும். இரு நூற்றாண்டுகளுக்கு முன் இலங்கையில் ஆங்கிலேயர் தேயிலைத் தோட்டங்களைப் புகுத்திய பின் மிகப் பெரிய தோரணையில் செம்பனைத் தோட்டங்கள் அமைக்கப்படுவது இதுவே முதல் முறை. இதில் கத்ரீ ஸ்தாபனம் ஐந்து கோடி டாலர்களை முதலீடு செய்கிறது. புரட்சிகரமான துரித விவசாயத் திட்டம் என இதனை காணி அபிவிருத்தி அமைச்சர் காமினி திஸ்ஸநாயக வர்ணித்திருக்கிறார். செம்பனையிலிருந்து எண்ணெய் (Palm oil) தயாராகும்.

கத்ரீ கார்ப்பரேஷனுக்கு இலங்கையில் ஏஜெண்டுகள் மார்க் இண்டர்நேஷனல் என்ற ஸ்தாபனம். இந்த ஸ்தாபனத்தின் தலைவர் ஆர். ஏ. நடேசன்; மானேஜிங் டைரக்டர் கே. மனோகரன்; டைரக்டர் கே. ரவீந்திரன். இந்திய வம்சாவழியினரை இலங்கை ஏஜெண்டுகளாகக் கொண்டுள்ள கத்ரீ ஸ்தாபனத்துடன் ஜயவர்த்தன அரசு ஒப்பந்தம் செய்து கொண்டுள்ளதானது, இந்திய வம்சாவழியினரிடம் அரசு கொண்டுள்ள நல்லெண்ணத்தைப் பிரதிபலிப்பதாகவும் அரசியல் வட்டாரங்கள் கருதுகின்றன.

—ரஜனி

சாதாரணமாகப் பொது நிகழ்ச்சிகளில், அமைச்சர் வருகைக்காக எல்லாரும் காத்திருப்பார்கள். ஆனால் அமைச்சர் குறித்த நேரத்தில் வந்து நிகழ்ச்சி துவங்குவதற்காகக் காத்திருந்த அதிசயம் அண்மையில் நிகழ்ந்தது.
இடம்: ராணி சீதை மன்றம்.
நிகழ்ச்சி: மகா கவி பாரதியாரின் 14 பாடல்கள் கொண்ட இசைத்தட்டு வெளியீட்டு விழா.

பாடல்கள் அனைத்தும் எல். வைத்தியநாதனால் இசை அமைக்கப்பட்டு 'ஏழாவது மனிதன்' என்ற திரைப் படத்தில் இடம் பெற இருக்கின்றன. பாடியிருப்பவர்கள்: ஜேசுதாஸ், எஸ். பி. பி, ராஜ்குமார் பாரதி, பி. சுசீலா முதலியோர். படத் தயாரிப்பாளர்: பாலை சண்முகம். திருநெல்வேலியைச் சேர்ந்த அட்வகேட். 1942ல் ஜெயிலில் இருந்தவர். தி.மு.க. ஆட்சிக் காலத்தின்போது பாளையங்கோட்டை புரபலர் ஸ்ரீனிவாசனுக்காக வாதாடியவர். மிசாவில் சிறை சென்றவர். மு. கருணாநிதிக்காகவும் வாதாடியிருக்கிறார். ''அச்சமயம் மு. க. தன்னந் தனியே நின்றார். இப்போது இந்திரா காந்தியுடன் சேர்ந்ததனால் அவரை எதிர்க்கிறேன்'' என்கிறார்.

பாரதியார் வாழ்க்கைக்கும் இவர் எடுக்கப்போகும் படத்துக்கும் எவ்வித சம்பந்தமும் இல்லையாம். தான் ஒரு தேசியவாதி ஆதலால் இளம் பிராயத்திலிருந்தே பாரதியாரின் பாடல்கள் தன்னைக் கவர்ந்து விட்டதாகச் சொல்கிறார். மகா கவியைப் பற்றி ஆங்கிலத்தில் ஒரு 'டாகுமெண்டரி' தயாரிக்கும் எண்ணமும் இருக்கிறதாம்.

- சாருகேசி, தமயந்தி

● 62 தங்கப் பதக்கங்கள், 23 வெள்ளிப் பதக்கங்கள் 5 வெண்கலப் பதக்கங்கள் — யாவுமே தேசிய அளவில் போட்டியிட்டு வெற்றி பெற்றதால் கிடைத்தவை. மாநில மட்டத்திலும் அதையொத்த இதர போட்டிகளிலும் பெற்ற பதக்கங்கள் எண்ணிலடங்கா. இப்படிப் பதக்கங்களும் பரிசுகளும் குவித்திருக்கும் பெண் மகாராஷ்டிரத்தைச் சேர்ந்த கல்லூரி மாணவி அனிதா ஸூட்.

1974ம் வருடம்தான் நீச்சல் போட்டிக் களத்தில் இறங்கிய அனிதா ஒரே வருடத்தில் தேசிய அளவிலான போட்டிகளில் பங்கு

✖ பாலை சண்முகம், கே. ஹரிஹரன் (இயக்குனர்), எல். வைத்தியநாதன், ஜேசுதாஸ்



பெறத் தகுதி வாய்ந்தவராகி விட்டார். பல்வேறு ரிக்கார்டுகளைத் தன்னகத்தே கொண்டுள்ள அனிதா பதினோராவது வகுப்புப் படிக்கும் மாணவி.

சென்னை அண்ணா நீச்சல் குளத்தில் நடந்த தேசிய நீச்சல் போட்டிகளில் புதிதாக ஐந்து ரிகார்டுகளை ஏற்படுத்தி எல்லோரையும் பிரமிக்க வைத்தார் அனிதா.

நடிகைகள் நீச்சல் உடையில் வருவதைப் பற்றி அவரிடம் கேட்டால், அதற்கு நேரடியாகப் பதில் சொல்லாமல், ''நாங்கள் இந்த உடையைக் கவர்ச்சி கருதி அணிவதில்லை; பொழுது போக்காகவோ, பணம் சேர்க்கவோ நீச்சல் குளத்தை நாங்கள் உபயோகப்படுத்துவதில்லை; ஒருதலை சிறந்த விளையாட்டில் ஈடுபட அத்தியாவசியமானதால் இந்த உடைகளை அணிகிறோம்; அணிந்த பிறகு அழகு பவனி வருவதில்லை!'' என்கிறார் அனிதா ஸைட்.

சலன் படம்: ஹரீஷ்



போட்டோ: பாலாஜி

# வில்லனுக்கும் உண்டு வாக்கு வன்மை!

சூதில் நாட்டைப் பணயமாக வைக்கும் படி மாயச் சகுனி தருமனைக் கேட்டதுமே அதிர்ச்சி யடைந்த விதுரன்,

''ஐயகோ இதை
யாதெனச் சொல்வோம்
அரச ரானவர்
செய்குவ தொன்றோ?''

என்று வினா எழுப்பினான். ''வையமிஃது பொறுத்திடுமோ? மேல் வான் பொறுத்-திடுமோ?'' என்று வினாவுக்கு மேல் வினா விடுத்த விதுரனானவன், ''வறிய வாழ்வை விரும்பிடலாமோ?'' ''வாழி, சூதை நிறுத்துதி'' என்று–தனது முன்னவனான திருதராஷ்டிரனுக்கு வேண்டுகோள் விடுக்கிறான். பாண்டவருக்கு நாடேனும் மிஞ்சட்டுமே என்பதல்ல விதுரனின் விருப்பம். அரசரானவர் நாட்டை வைத்துச் சூதாடுகின்ற அநாகரிகத்தைத் தடுக்க வேண்டு மென்பது தான்.

இதனைக் கேட்டுத் துரியோதனன் பொறுப்பானா? பாரதி படைத்த குறுங்காப்பியத்தில் வரும் நல்லவனான விதுரனை வில்லனாக துரியோதனன் ஏசுகிறான். அதனைச் சொல்ல வரும் பாரதி, வழக்கம்போல் தன்னுடைய கருத்தையும் கலந்து விடுகிறார்.

''நெறியுரைத்திடும்
மேலவர் வாய்ச்சொல்
நீச ரானவர்
கொள்ளுவ துண்டோ?''

என்பது பாரதியின் வாக்கு.

விதுரன் கூறிய நல்லுரையைக் கேட்டு, துரியோதனனுடைய புருவம் துடித்ததாம்!



விழிகள் இரண்டிலும் நெருப்புப் பொறி பறந்ததாம்! சினத்தின் வெறி தலைக்கேறியதாம்! மதியே மயங்கிப் போய் விட்டதாம்! துரியோதனன் விதுரனைச் சாடுவதற்கு முன் துரியோதனனை பாரதிசாடிவிடுகிறார். பிறகு தான் துரியோதனனைப் பேசச் சொல்கிறார்:

''நன்றிகெட்ட விதுரா — சிறிதும்
நாணமற்ற விதுரா;
தின்ற உப்பினுக்கே நாசந்
தேடுகின்ற விதுரா
அன்று தொட்டு நீயும் — எங்கள்
அழிவு நாடுகின்றாய்;
மன்றிலுன்னை வைத்தான் எந்தை
மதியை என்னுரைப்பேன்!''

துரியோதனனுக்கு விதுரன் நன்றியுடையவனாக இருக்க வேண்டுமாம்! ஆமாம்; அப்பனுடன் பிறந்த சித்தப்பனான விதுரன் அண்ணன் மகனுக்கு நன்றியுடையவனாக இருக்க வேண்டுமாம்!

இது அரவக் கொடியோனின் ஆணவத்தைக் காட்டும் வாதம்.

தொடர்ந்து, ''ஐவருக்கு நெஞ்சும் எங்கள் அரண்மனைக்கு வயிறும் தெய்வம் அன்றுனக்கே விதுரா செய்து விட்டதேயோ?'' என்கிறானே, அதிலே துரியோதனனின் வாக்கு வன்மை வெளிப்படுகிறது. இறைவன் செய்த பெருந் தவறு வில்லன்களுக்கும் வாக்கு வன்மை தந்ததாகும்.

இதைத்தானே இன்றைய அரசியலிலும் பார்க்கிறோம். தருமவானை விடவும் அதர்மவானே தருமத்தைப் பற்றி அதிகமாகப் பேசுகிறான்!

இதற்கு மேல் பிறப்பு காரணமாக விதுரனுக்குள்ள ஒரு குறைபாட்டினை எடுத்துக் காட்டி, அவனை வென்றுவிட முயல்கிறான் வில்லன் துரியோதனன்.

விதுரன் தாசியொருத்தியிடத்து விசித்திர வீரியனுக்குப் பிறந்தவன். வேசியர், உள்ளத்திற் பொய்யை வைத்து, உதட்டிலே புகழுரைத்து வாழ்வோர். தந்தை வழியில் சித்தப்பனாகிவிட்ட விதுரனின் தாய் வழியில் உள்ள குறையை ஆயுதமாக்கிக் கொண்டு துரியோதனன் அவனைத் தாக்குகிறான். கடைசியில்,

''வன்புரைத்தல் வேண்டா — எங்கள்
வலிபொறுத்தல் வேண்டா
இன்பமெங்களுண்டோ— அங்கே
ஏகிடு....'' என்கிறான் துரியோதனன்.

ம.பொ.சி

Printed by V. .Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd, at the Bharathan Press, Race Course Road Guindy. .Madras-600 032. (Phone: 431543)
Assistent Editor: P.S. Mani, Layout Artist: Kalpana, Editor: K. Rajendran

REGISTERED. No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka